ரிஜிஸ்டர் நெ. M. 4514

விலை 2 அணா

ஒன்றுபட்டாலுண்டு வாழ்வே—நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே
நன்றிது தேர்ந்திடல் வேண்டும்—இந்த
ஞானம் வந்தாற்பின் நமக்கெது வேண்டும்!

# ஜனசக்தி



இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி
தமிழ்நாட்டுக் கமிட்டியின் வாரப் பத்திரிகை

உழவுக்கும் தொழிலுக்கும்
வந்தனை செய்வோம் - வீணில்
உண்டு களித் திருப்போரை
நிந்தனை செய்வோம்
விழலுக்கு நீர் பாய்ச்சி
மாய மாட்டோம்— வெறும்
வீணருக் குழைத் துடலம்
ஓய மாட்டோம்.

இதழ் 10 | 9-12-1942 புதன்கிழமை | ஆசிரியர்: பி. ராமமூர்த்தி

# மக்களின் சக்தி மகத்தானது

## மக்களின் ஐக்கியமே சுதந்திரப் பாதை

செஞ்சேனை முன்னேறுவதைப் பார்த்தால் ஹிட்லரின் வீழ்ச்சி நெடுந் தூரத்திலில்லை என்பது தெளிவாகிறது. பிரிட்டிஷ், அமெரிக்கப் படைகள் வட ஆப்பிரிக்காவில் அடைந்துள்ள வெற்றி இரண்டாம் போர்முனையில் கொண்டு சேர்த்தால், ஐரோப்பாவில் இருபுறமும் தாக்குதலுக்குள்ளாகும் நாஜி சைன்யம் தவிடு பொடியாவது நிச்சயம். சென்ற காலத்தில் ஹிட்லர் தனித்தனியாக ஒவ்வொரு நாடாக விழுங்க முடிந்தது. ஒரு போர் முனையில் முழுத் தாக்குதலையும் செலுத்தி வெற்றியடைய முடிந்தது. ஸோவியத் நாட்டில் தான் நாஜி சைன்யங்கள் எவ்வளவோ பிரதேச வெற்றிகளை அடைந்தும் வீர சோவியத் மக்களை அடிமைப்படுத்த முடியவில்லை. சேற்றில் காலை விட்டுக்கொண்ட மாதிரி முன்னுக்கும் போக முடியாமல் பின்னுக்கும் ஓட முடியாமல் சாவதா சரணடைவதா என்று தவிக்கின்றன. இன்று இரண்டாம் போர் முனையும் ஏற்பட்டு விடுமேயானால் நாஜிக் கொடூரம் அடியோடு ஒழியும். இல்லையேல் யுத்தம் நீடித்து நடக்கலாம். ஹிட்லரின் வீழ்ச்சியின்றி இந்த யுத்தத்திற்கு முடிவில்லை. இறுதி வரையில் அவன் படைகளை ஏவி பலிகொடுத்துக் கொண்டுதானிருப்பான். காரியம் மிஞ்சிப் போனால் 'வீர புருஷனாக'த் தற்கொலையும் செய்துகொள்ளலாமல்லவா! இன்னும் ஆங்காங்கு ஜெர்மன் படைகள் எதிர்த்து நிற்கின்றன. யுத்தத்தை விரைவில் முடித்து இன்னும் அநேகருடைய உயிரையும் பொருட்களையும் காப்பாற்ற வேண்டுமென்றால் ஹிட்லர் சைன்யங்கள் ஒவ்வொரு அரங்கத்திலும் இடைவிடாமல் தாக்கப்பட்டு முறியடிக்கப்பட வேண்டும். பாஸிசம் ஒழிந்தால்தான் எந்த நாட்டிற்கும் ஆக்கிரமிப்பு பயம் அகலும், வீரத்துடனும் உறுதியுடனும் போர்புரியும் சோவியத் மக்களின் வெற்றி உலக மக்களின் வெற்றியுமாகும்,

### சோவித்தையும் சீனாவையும் போல

இங்கு நாம் சோவியத் மக்களிடமும் சீன மக்களிடமும் ஒரு முக்கியமான படிப்பினையைக் கற்றுக்கொள்ள வேண்டும். சோவியத் நாட்டின் ஸோஷலிஸ்ட் உற்பத்தி வினியோக முறையும், வர்க்கப் பிரிவினையற்ற ஜன சமுதாயத்தில் வார்த்தெடுத்த ஐக்கியமும் பலம் பெற்ற ஹிட்லர் சைன்யங்களுக்குத் தக்க பதிலளித்தன. சீன மக்களின் ஐக்கிய முன்னணி அவர்களைவிட அநேக மடங்கு ஆயுத பலங் கொண்ட ஜப்பானிய ஆக்கிரமிப்பாளர்களுக்கு அழியா எதிர்ப்பைக் காட்டியது. பொதுமக்களின் சக்தியே சக்தி! அதை எந்த ஏகாதிபத்திய சூழ்ச்சிகளும் அண்ட முடியாது. அத்தகைய சக்தியை 20கோடி ரஷ்ய மக்களைப் போல, 40 கோடி சீன மக்களைப்போல், 40 கோடி இந்திய மக்களாகிய நாமும் சிருஷ்டித்துக் கொள்ள முடியும், சிருஷ்டித்தாக வேண்டும். நமது ஒன்றுபட்ட சக்தியே பாஸிசப் படையெடுப்பைத் தகர்த்தெறியும்; பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைப் பணியவைத்து நமக்கு தேசிய சர்க்காரைக் கொணரும்.

ஆனால், "ஹிட்லருக்கு ரஷ்யாவில் தோல்வி ஜப்பானுக்குபசிபிக்சமுத்திரத்தில் தோல்வி, பிரிட்டனின் சங்கடங்கள் குறைந்து விட்டன, நமக்கு இந்த யுத்த மூலம் விடுதலை இல்லாமல் போய்விட்டதே" என்று மனச்சோர்வடையும் தேசபக்தர்களும் இருக்கின்றனர். தேச விடுதலைக்கு நாட்டு மக்களின் சக்தியை நாடாமல் ஏகாதிபத்தியத்தின் சங்கடங்களையே எதிர் நோக்கியதன் விளைவே இது. எந்த ஏகாதிபத்தியத்திடமிருந்தும் சுயராஜ்யம் தானமாக வராது என்பதை நாம் ஒவ்வொருவரும் உணர்ந்தாகவேண்டும். அதே சமயத்தில் இன்றுள்ள உலக நிலைமையில் பாஸிஸத்தை எதிர்க்கும் இந்த யுத்த மூலமே நமது விடுதலையையும் அடையமுடியும் என்பதையும் கவனிக்கவேண்டும். பாஸிஸம் என்பது இன்று உலக மக்களனைவரையும் அடிமைப்படுத்தக் கிளம்பியுள்ள ஏகாதிபத்தியப் பிற்போக்கு சக்திதான். இதை ஒரே மூச்சாய் உலக மக்களனைவரும் வெறுக்கின்றனர், எதிர்க்கின்றனர். இந்த எதிர்ப்பு, பொதுஜன பலங் கொண்டே வெற்றிகரமாய்முடியும் என்று யுத்த நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றும் நிரூபித்து வருகின்றன. ஸோவியத் தாக்குதலையும் பிரிட்டிஷ்-அமெரிக்கப் படைகள் சிரமத்துடன் முன்னேறுவதையும் ஒப்பிட்டுப் பார்த்தாலே போதும். இவ்வாரம் சர்ச்சில் பேசியபோது ஆப்பிரிக்காவில் கிடைத்த வெற்றியைப்பிரமாதமாகக்கருதிவிட முடியாது என்று குறிப்பிடவேண்டியிருந்தது.

### ஒற்றுமை மூலமே

மேலும் மேலும் பிரிட்டிஷ் அமெரிக்க மக்களின் பொங்கி எழும் சக்தியே இரண்டாம் போர்முனையையும் சிருஷ்டிக்கவேண்டிய நிர்ப்பந்தத்தை ஏற்படுத்தும். பாஸிஸப் பேய்களை விரைவில் இறுதியான முறையில் முடிவுகட்டுவதில் உலகமக்கள் கண்ணும் கருத்துமாயில்லாமலிருக்கமுடியாது. இதற்குமுட்டுக்கட்டையாயிருக்கும் எந்த முதலாளித்துவப் பகுதியும் பிரிட்டனிலாயினும் சரி அமெரிக்காவிலாயினும்சரி பின்வாங்கித்தானாகவேண்டும். பாஸிஸ எதிர்ப்பில்தான் சீன மக்கள் ஒன்றுபட்டனர். சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் ஒற்றுமை வழியை ஏற்றுக் கொண்டனர். 1931-ம் வருடம்வரை ஜப்பானின் கையாளாக இருந்து கம்யூனிஸ்டுகளைக் கொலை செய்துவந்த சியாங்-கேய்-ஷேக்கும் பொதுஜன சக்திக்குப் பணிந்து கம்யூனிஸ்டுகள் காட்டிய வழியில் ஜப்பானை எதிர்க்கும் திட்டத்தில் சீன மக்களின் ஐக்கியத்தையும் பலத்தையும் பெருக்க முடிந்தது.

மக்கள் ஜனநாயக உரிமைகளுக்காக நடை பெறும் இப்போரில் எங்கெங்கே அந்த உரிமைகள் பாதிக்கப் பட்டுள்ளனவோ அங்கெல்லாம் மக்கள் தங்கள் ஒற்றுமையின் மூலமாகத் தங்கள் உரிமைகளைப் பெருக்கி பாஸிஸத்தை முறியடிக்க முன்னேறி வருகின்றனர். ஆகவே யுத்தத்தை வெற்றிகரமான முறையில் நடத்துவதே மக்களின் சக்தியையும் திரட்டும்படியான நிகழ்ச்சியாகிறது. பாஸிஸத்தை முறியடிப்பது உலக ஏகாதிபத்தியத்திற்கே சாவுமணி அடிக்கும் வேலை. பாஸிஸத்தை ஒழிக்கும் யுத்தத்தை வெற்றிகரமாய் நடத்தி ஏகாதிபத்தியத் தடங்கல்களுக்கும் சூழ்ச்சிகளுக்கும் மக்கள் உலைவைத்து வரும்போது யுத்த இறுதியில் ஏகாதிபத்தியக் கனவுகள் பலிக்கும்; மக்கள் மீண்டும் அடிமை வாழ்வில் ஆழ்த்தப்படுவார்கள் என்பதற்கு ஆதாரமே கிடையாது.

### பாசிஸ எதிர்ப்புக் கண்ணோட்டம்

இந்தக் கண்ணோட்டத்தில் இந்தியப் பிரச்னையை கவனித்தால் பாஸிஸ எதிர்ப்பில் ஈடுபட்டுள்ள ஒவ்வொரு மக்களுக்கும்நமதுவிடுதலையில்எவ்வளவு கவலைஅதிகரித்து வருகிறது என்பது விளங்கும். 40 கோடி இந்திய மக்களின் ஜனசக்தி சாதாரணமான சக்தி அல்ல. இந்த சக்தியை நிராகரித்து பாஸிஸத்தை வெல்ல முடியாது. 'ஹிட்லர் பலஹீன மடைந்தான் நமது சாம்ராஜ்யம் தப்பிவிட்டது' என்று அதிகாரவர்க்கத்தின் இறுமாப்பு இங்குமங்கும் அதிகரித்த தோற்றத்தைக் கண்டு நாம் ஏமாற வேண்டியதில்லை.

அமெரிக்காவிலாயினும் சரி, பிரிட்டனிலாயினும் சரி இந்தியப் பிரச்சினையைப் பற்றிய கிளர்ச்சி வலுத்து வருகிறது. "சர்ச்சில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்காகப் போராடலாம். நமது நோக்கமும் அதுதானா?" என்று அமெரிக்க மக்களிடம் அடித்துக் கேட்கிறார் லூயி பிஷர் என்ற பிரபல பத்திரிகை நிருபர். நியூ யார்க் டைம்ஸ் எனும் பிரபல அமெரிக்க பத்திரிகை இந்தியப் பிரச்னையின் முக்கியத்துவத்தையும் இந்தியா விடுதலைபெற வேண்டிய அவசியத்தையும்பற்றி மீண்டும் மீண்டும் வற்புறுத்தி வருகிறது, "ஜப்பானிய படையெடுப்பை இந்தியாவில் தவிர்க்க வேண்டுமானால் இந்தியாவில் உள்நாட்டுக் குழப்பத்தை நீடித்து அனுமதிக்கக் கூடாது. காங்கிரஸ் தலைவர்களும் முஸ்லீம் தலைவர்களும் கொண்ட சர்க்காரை ஏற்படுத்த வேண்டும்'! என்று செல்வாக்குப் பெற்ற ஜான் புல் என்ற ஆங்கிலப் பத்திரிகை கூறுகின்றது. பொது மக்களின் சக்திக்கு ஏகாதிபத்தியங்கள் இன்று பணிந்துதானாக வேண்டும். இல்லையேல் பாஸிஸத்தை முறியடிப்பதென்பது பகற் கனவு. இதுதான் இன்றைய புதிய நிலைமையின் மர்மம்.

### உலக மக்களுடன்

இந்த சந்தர்ப்பத்தில் நாமும் பொது மக்களின் சக்தியில் பரிபூர்ண நம்பிக்கையுடன் உலக மக்களோடு தோளோடுதோள் நின்று பாஸிஸத்தை முறியடித்து நமது விடுதலையையும் பெற்றே தீர வேண்டும். பொது ஜன சக்தி எத்தகைய ஏகாதிபத்திய சூழ்ச்சிகளுக்கும் தக்க பதிலளிக்கும் மக்களின் சக்தியில் நம்பிக்கை யிழந்து யுத்தத்தை நிராகரிக்கும் எந்தத் திட்டமும் உண்மையை மறுக்கும் திட்டம்; குழப்பத்தைக் கொண்டு வருமே தவிர விடுதலையைக் கொண்டு வராது.

யுத்த முயற்சிகள் ஏகாதிபத்திய அரசாங்கத்தின் கையிலிருக்கிறது என்பது உண்மையே. பாஸிஸ எதிர்ப்பு வெற்றிகரமாய் நடைபெறுவதற்கு தேசிய சர்க்காரை நாம் பெற்றே தீரவேண்டும். தேசிய சர்க்காரை விரைவில் அடையும் வழியை காண வேண்டுமே ஒழிய ஏகாதிபத்தியத்தின் கையிலேயே யுத்த முஸ்தீப்புகளையும் முயற்சியையும் விட்டுவைப்பது நாட்டுக்கு விரோதமான செய்கையாகும். தேசிய சர்க்கார் பெறுவதற்கு மக்களை ஒன்றுபடுத்தித் திரட்டியாக வேண்டும். காங்கிரஸ் தலைவர்களை பொதுஜன சக்தியைக் கொண்டு மீட்க வேண்டும். காங்கிரஸ் லீக் சமரச மூலம் நமது ஜனப் பிரதிநிதிகள் கொண்ட இந்திய தேசிய சர்க்காரை காலதாமதமின்றி நிறுவியாக வேண்டும்,

### வாழ்வதா ? வீழ்வதா ?

நமது வாழ்வே அடியோடு அழியுந் தருவாயில் இன்று இருக்கிறோம். நமது தேச சரித்திரத்திலேயே முக்கியமான கட்டம். பாஸிஸ்டு ஆக்கிரமிப்பிலுள்ள இதர நாடுகளைப் பார்த்தால் சும்மா இருப்பின் நமது கதி என்ன ஆகும் என்பதை உணரலாம். ஆனால். இதர நாடுகளைக் கைப்பற்றியது போல் நம்மை அவ்வளவு எளிதில் நாம் அசிரத்தையாயிருந்தாலொழிய யாரும் அடக்க முடியாது. நமது சுதந்திர இயக்கம் 55 வருடத்திற்கு மேற்பட்டது. எவ்வளவோ கஷ்டங்களையும் சமாளித்துத் தேசிய இயக்கத்தை வளர்த்துள்ளோம். மனச்சோர்வுக்கு இடமே கிடையாது. ஆனால், இன்று தேசிய ஒற்றுமை இல்லையெனில் ஒரு அடிமை வாழ்விலிருந்து மற்றொன்றுக்கே செல்லுவோம் என்பதை நாம் நன்கு உணரவேண்டும்.

தேசீய ஒற்றுமையென்றால் சாதாரண சமாசாரம் அல்ல.தலைவர்களின்ஒப்பந்தம் மட்டுமல்ல. அடிமைப்பட்டிருந்தும் விழிப்படைந்துள்ள மக்களின் சக்தியே தேசிய ஒற்றுமை. பொதுமக்களின் போராட்ட சக்தி, அடிமை நாட்டாரின் ஒரே ஆயும்; அமோகமான பொதுஜன எழுச்சி. நமது ஒற்றுமை வளரின் பொதுஜன பலம் மேலும் மேலும் பெருகும். இதுவே ஒரு போராட்டமாகும். இத்தகைய பொதுஜன இயக்கத்திற்கு முன், பொதுமக்களின் திரண்ட சக்திக்குமுன் ஏகாதிபத்தியம் பணிந்தே ஆகவேண்டும்.

இந்திய நாட்டின் வருங்கால வாழ்வு நம் கையில் தானிருக்கிறது, ஏகாதிபத்தியத்தின் கையிலல்ல. நாம் 40 கோடி மக்கள். நமது நாகரீகம் புராதனமானது. நாம் ஒன்றுபட்டால் வெற்றி நமதே. சீன மக்கள் காட்டிய வழியை ஏற்றுக்கொண்டு ஒன்றுபடுவோமாக! வீர சோவியத் மக்களைப் பின்பற்றுவோமாக! அவர்களோடு தோளோடு தோள் நின்று பாஸிஸத்தை முறியடித்து நமது விடுதலையையும் பெறுவோமாக, ஒற்றுமைப் பாதையே இன்று விடுதலைப் பாதை.

ஜனசக்தி

9-12-42 புதன்கிழமை

# எதிர்காலம் யார் கையில்?

'உலகம் மாறலாம், உலக மக்கள் முன்னேறலாம்; சோவியத் செஞ்சேனை நாஜிகளை முறியடிக்கலாம். ஆனால் நான் மட்டும் மாற மாட்டேன்' என்ற முறையில் இன்னும் பேசப்பார்க்கிறார் இந்தியா மந்திரி அமெரி.

சென்ற வாரம் காமன்ஸ் சபையில் இந்தியாவின் சுதேச மன்னர்களுடன் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் செய்துகொண்டுள்ள உடன்படிக்கைகள் அமுலில் இருக்குமா? அவர்களது உரிமைகள் காப்பாற்றப்படுமா என்று ஒரு அங்கத்தினர் போட்ட கேள்விக்கு அதற்கென்ன சந்தேகம் என்று பதிலளித்தார் அமெரி.

யுத்த இறுதியில் வருங்கால உலகம் முரண்பாடுகள் இன்றி அமைவதற்கான முயற்சிகள் என்ன என்று 'பெடரல் யூனியன் இயக்கம்' என்ற ஒரு கோஷ்டியார் கேட்ட கேள்விக்கு அமெரி அளித்த பதில் என்ன? "ஐக்கிய ஐரோப்பாவை நிறுவும் பணியில் நாம் கவலை செலுத்த வேண்டும்" என்பதே அவர் பதிலின் சாராம்சம். அதே பல்லவி தான் அட்லி, ஈடன், கிரான்போர்ன் முதலிய பிரிட்டிஷ் மந்திரிகளும் பாட ஆரம்பித்துவிட்டனர். ஆனால் இந்தியப் பிரச்னையை இந்திய மக்களின் விருப்பத்திற்கு இணங்கியபடி முடிக்கவேண்டும் என்ற அவசியத்தை மறந்து, பழங்கதைகளையே பேசி வருகின்றனர். பாஸிஸத்தை வெற்றிகரமாய் முறியடிப்பதிலும் வருங்கால உலக வாழ்வை நிர்ணயிப்பதிலும் நாற்பது கோடி இந்திய மக்களுக்கும் ஒரு முக்கியமான பங்கு உண்டு என்பதை இந்தியா மந்திரி அமெரியும் அவரது சகாக்களும் எவ்வாறு ஒப்புக்கொள்ள முடியும்?

ஆனால் உலக நிலையும், இந்திய நிலையும் அசைய விரும்பாத அமெரிகளையும் அசைத்தே தீரும். சுதந்திர ஆர்வத்தினால் தூண்டப்பட்டு பாஸிஸ எதிர்ப்பு யுத்தத்தில் முழு மனதுடன் இந்திய மக்கள் இடுபட்டாலொழிய இந்திய நாட்டை வெறும் ராணுவ பலம் கொண்டுமட்டும் காக்க முடியாது என்று ஐக்கிய நாட்டு மக்கள் அனைவரும் உணர்ந்துவிட்டனர். பிரிட்டனிலாயினும் சரி, அமெரிக்காவிலாயினும் சரி இந்தியர்களுடைய ஒத்துழைப்பை-இந்திய மக்களின் ஒற்றுமையை அடிப்படையாகக் கொண்ட தேசீய சர்க்காரின்மூலம் நெருக்கடியைத் தீர்த்த பரிபூர்ண ஒத்துழைப்பை—உடனே பெற்றாக வேண்டுமென்று பொதுமக்கள் பலத்த கிளர்ச்சி செய்து வருகின்றனர்.

இதே சமயத்தில் இந்தியாவிலும் மக்களின் ஒற்றுமை திரண்டு பெருகி வருகின்றது. காங்கிரஸ் லீக் சமரசம் உடனடியாக வேண்டும் என்று சென்றவாரம் பிரபல முஸ்லிம் லீகர்களால் பம்பாய் கூட்டமொன்றில் வற்புறுத்தப்பட்டது. காங்கிரஸ் லீக் சமரசத்தை அடிப்படையாகக் கொண்ட தேசீய சர்க்கார் நிறுவும் முயற்சிக்கு ஓயாமல் உழைப்பதாக கங்கணங்கட்டிக் கொண்டு அறிக்கை விடுத்திருக்கிறார் சிந்து மாகாண மாஜி பிரதம மந்திரி அல்லாபக்ஸ்.

கம்யூனிஸ்டுக் கட்சி இந்த சந்தர்ப்பத்தில் ஏற்றுக் கொண்டுள்ள ஒற்றுமை இயக்கம் நாடெங்கும் அமோகமான ஆதரவு பெற்று பொதுமக்களை ஒன்றுபடுத்தி வருகிறது. தேசபக்தர்கள் கம்யூனிஸ்டுக்கட்சி காட்டும் வழியே இன்றுஏகாதிபத்தியப்பிடிப்பை இந்நாட்டிலிருந்து அகற்றக்கூடிய ஒரே பாதையென்று மேன்மேலும் ஒப்புக்கொள்கின்றனர். நாட்டைக் குலைக்கும் நாசவேலைகளைத் தடுக்க மேன்மேலும் தேசபக்தர்கள் முன் வருகின்றனர். நாச வேலைகளில் இடுபட்டு, நாட்டைப் பிளவுபடுத்தி, ஒற்றுமையைக் குலைக்கும், 5-ம் படையினர் எங்கும் தனிப்படுத்தப்பட்டு, வெறுக்கப்பட்டு வருகின்றனர். இந்தியர்கள் ஒன்றுபட முடியாது என்ற ஏகாதிபத்யப் பிரசாரத்திற்கு இந்திய மக்களிடம் பெருகி வரும் ஒற்றுமையே தக்க பதிலாகும். தேசீய ஆர்வத்தை நசுக்கியோ மக்களின் பிளவுகளைப் பயன்படுத்திக் கொண்டோ அதிகார வர்க்கம் நெடுங்காலம் நமது தேசீய சர்க்கார் கோரிக்கைக்கு இணங்காமல் தட்டிக் கழிக்க முடியாது.

இவ்வாறு தேசீய ரீதியிலும் சர்வதேச ரீதியிலும் உருண்டு திரண்டுவரும் உலகப் பொதுமக்களின் ஐக்கிய சக்திக்குமுன் பிற்போக்காளர்கள் எம்மாத்திரம்? பொதுஜன யுத்தத்தை உலகமக்கள் வெற்றிகரமாய் விரைவில் முடித்துக்கொள்வதற்கு முட்டுக்கட்டையாயிருக்கும் கோஷ்டிகள் ஒவ்வொரு நாட்டிலும் ஒதுக்கப்படுவது நிச்சயம். உலக மக்களின் சக்தி அவ்வளவு மகத்தானது. மக்களின் சுதந்திர ஆர்வத்திற்கு எல்லையே கிடையாது. பாசிஸத்தின் கொடூரத்தை உலக மக்களல்லவா நன்கறிவார்கள். மக்களாலல்லவோ பாசிஸத்தை முறியடிக்க முடியும்.

அநேக அமெரிகள் பழைய மனப்பான்மையிலேயே என்ன பேசினும், நாம் ஒன்றுபட்டு தேசீய சர்க்காரை விரைவில் அடைய முடியும். வருங்கால உலகத்தை நிர்ணயிப்பது ஏகாதிபத்திய பேராசை கொண்டவர்கள் கையிலில்லை. உலக மக்களின் கையில்தான் இருக்கின்றது. இந்திய மக்களாகிய நமக்கும் பாஸிஸத்தை வீழ்த்தி, சுதந்திரத்தை நாட்டுவதில் முக்கிய பங்குண்டு. இதை உணர்ந்து ஒற்றுமைப் பாதையிலே நம் தாய்நாட்டைப் பாதுகாத்து பிற தேச மக்களுடன் தோளோடு தோளாய் நின்று, நமது சுதந்திர வாழ்க்கையை அடைவோம்.

# குறிப்புகள்

## கூட்டு அபராதங்கள்

நாடெங்கும் அநேக இடங்களில் கூட்டு அபராதங்கள் விதிக்கப்பட்டுள்ளன. நாச வேலைகள் நடைபெறுவதனால் இந்த தண்டனை விதிக்கப்பட்டுள்ளது என சர்க்கார் அறிக்கைகள் வெளிவந்திருக்கின்றன. சிலருடைய தவறான செயல்களுக்காக எல்லோரும் தண்டனையை அனுபவிக்க வேண்டியிருக்கிறது.

பாஸிஸ்டு படையெடுப்பு நெருங்கியுள்ள காலம் இது. இந்திய மக்களின் ஒன்றுபட்ட சக்தியே இந்தப் படையெடுப்பைத் தகர்த்தெறிய முடியும். நமது ஒற்றுமையைக் குலைக்கும் எத்தகைய சம்பவங்களையும் நாம் அனுமதிக்க முடியாது.

நாசவேலைகள் நமது பாதுகாப்பைக் குலைக்கின்றன; நமது பிளவுகளை அதிகப்படுத்துகின்றன; நமது மக்கள் வயிற்றிலடிக்கின்றன; நமது நாடு பாஸிசத்திற்கு எளிதில் அடிமையாகக்கூடிய நிலைமையைத்தான் சிருஷ்டிக்கின்றன. நாசவேலைகளைத் தடுப்பதும், தேசபக்தர்களை மீட்பதும் நமது தீராக்கடமையாகின்றது.

இதேசமயத்தில் கூட்டு அபராதங்களும் நமது ஒற்றுமையின்மையைத்தான் அதிகப்படுத்துகின்றன. பொதுஜன அதிருப்தியை எங்கும் கிளப்பியுள்ளன. கூட்டு அபராதங்கள் நீடிக்கும்வரை மக்கள் ஆர்வத்துடன் நாட்டுப்பாதுகாப்பில்பங்கெடுத்துக்கொள்ளமாட்டார்கள். பீதியடைந்து சோர்வுற்றமக்களா வீறுகொண்டெழுந்து அன்னியப் படையெடுப்பை ஒரே மூச்சாக எதிர்க்க முடியும்!

நாட்டுப் பாதுகாப்பை உத்தேசித்து, அரசாங்கம் உடனே இந்தக் கூட்டு அபராத முறைகளையும் வசூல் முறைகளையும் நிறுத்தவேண்டும், வசூல் செய்ததொகைகளையும் மீண்டும் மக்களுக்குத் திருப்பிக் கொடுத்தே அவர்களது நன் மதிப்பையும் ஆதரவையும் பெறமுடியும். மக்களின் ஆதரவு நாட்டுப் பாதுகாப்புக்கு இன்றியமையாதது.

## பழைய நோக்கம், புதிய சூழ்ச்சி

காங்கிரஸை நிராகரித்து, தேசீய இயக்கத்தைப் புறக்கணித்து, இந்திய நிலைமையை சமாளிக்க முடியாதென ஏகாதிபத்தியம் உணருகிறது. முஸ்லீம் லீகும் தேசீய சர்க்கார் கோரிக்கையை அழுத்தந் திருத்தமாய் வற்புறுத்துகிறது. காங்கிரஸ்—லீக் சமரசம் ஏற்படக்கூடிய நிலைமையில் இந்திய மக்களின் ஒற்றுமை வளர்ந்து வருகிறது. இந்தியர்கள் ஒன்றுபட்டால் ஏகாதிபத்தியம் பணிந்தாக வேண்டும், தேசீய சர்க்கார் கோரிக்கையை நிராகரிக்க முடியாது. நமது பிளவுகளே ஏகாதிபத்தியத்தின் கையிலுள்ள ஒரே ஆயுதம்.

காங்கிரஸ்—லீக்சமரசமாக இந்திய ஒற்றுமை ஏற்பட்டுவிட்டால் என்ன செய்வது என்ற நோக்கத்துடனேயே இந்திய சமஸ்தானங்களின் பிரச்னை இப்பொழுது கிளப்பப்பட்டிருக்கிறது- "மன்னர்" மண்டலத்தின் தலைவரும் யுத்த மந்திரி சபையில் இந்தியப் பிரதிநிதியுமான நவநகர் ஜாம் சாகிப் லண்டன் கிழக்கிந்திய அஸோஸியேஷன் கூட்டத்தில் சுதேச மன்னர்களின் உரிமைகள் ஏகாதிபத்தியத்தினால் பாதுகாக்கப்படவேண்டுமென்று பேசியிருக்கிறார்.

பிரிட்டிஷ் இந்திய மக்கள், சமஸ்தான மக்கள் என்று இரு பிரிவாகக் கருதப்படவேண்டுமென்று சமஸ்தானாதிபதிகள் கோரலாம்; ஏகாதியத்தியமும் விரும்பலாம். காமன்ஸ் சபையில் அமெரி, சுதேச மன்னர்களின் உரிமைகளைக் காப்பதாக வாக்குறுதி கொடுத்ததன் அர்த்தமும் இதுதான்.

ஆனால், இன்று சமஸதானங்களிலும் மக்கள் விழிப்படைந்து ஒற்றுமை இயக்கத்தில் பங்கெடுத்துக் கொண்டு முன்வருகின்றனர். அவர்களது ஒற்றுமையும் ஒற்றுமை இயக்கத்தின் ஒரு பகுதியே. பாஸிஸத்தை எதிர்க்கவும் நாட்டைக்காக்கவும் இந்திய மக்களனைவரும் ஒன்றுபட்டே தீருவார்கள்.

காங்கிரஸ் லீக் சமரசம் ஏற்படாதென்ற பிரசாரத்திற்கு பதிலளிக்கும் நமதுபொதுஜன ஒற்றுமை சக்தியே இந்தியர்களைப் பிரித்துவைக்க முயலும் இப்புதிய ஏகாதிபத்திய சூழ்ச்சியையும் முறியடிக்கும்.

## செல்லாத காசு

கிரான்போர்ன் பிரபு பிரிட்டிஷ் காலனி மந்திரியாயிருந்து, சமீபத்தில் நடந்த கிரிப்ஸ் கல்தாவுக்குப் பின்னர் லார்டு பிரிவிசீல் பதவி பெற்றவர். இந்தியாவுக்கு அடுத்த வைஸ்ராயாக வரக்கூடும் என்றும் சிலர் கூறுகின்றனர். இவர் பிரிட்டிஷ் கன்ஸர்வேடிவ்கட்சியின் திலகங்களில்ஒன்று.

பிரிட்டிஷ் காலனிகளின் எதிர்காலத்தைப்பற்றி பிரிட்டிஷ் மந்திரிசபையின் சார்பில் பார்லிமெண்டில் பேசிவிட்டார். அடிமை நாட்டு மக்களைப் பச்சிளங்குழந்தையை வளர்ப்பது போல் வளர்த்து நாளடைவில் டொமினியன் அந்தஸ்துக்கு உயர்த்திவிடுவார்களாம். இது பழங்கதைதான். பிரிட்டன் நாகரீகத்தை அளித்து வளர்க்கும் "டிரஸ்டீ" பேச்சுக்குப் புதிய உருவத்தைக் கொடுத்துவிட்டார். அட்லாண்டிக் சாஸனம், சுதந்திரம், சுயநிர்ணயம் என்ற காசுகள் அமுலில் வருங்காலத்தில் பழைய துட்டுக்குப் புது மெருகு கொடுத்துப்பார்க்கின்றார். என்ன சொன்னால் என்ன! பழயகாசு பழயகாசுதான். அது செல்லாத காசு. இந்த யுத்தமுடிவில் அதைக் குப்பைத்தொட்டியில்தான் போட வேண்டிவரும்.

ஆனால், இந்த முயற்சியைத் தடுக்கவழி என்ன! மக்களின் ஒற்றுமையும் விழிப்பும் வேண்டும், பாஸிஸ்டு எதிர்ப்பு உணர்ச்சிகொண்ட ஊக்கம் வேண்டும். அதைக் கிரான் போர்ன் பிரபுக் கும்பல் விரும்புவதில்லை. அதனால்தான் பர்மா, மலேயா இழந்ததற்குக் காரணம் அந்த நாடுகள் காலனிகளாக இருந்ததல்ல; எங்களிடம் தக்க ஆயுதங்களில்லை. கடினமான போர், திறமைவாய்ந்த எதிரி என்றெல்லரம்கூறுகின்றார். சுதந்திர ஸயாம் விழுந்துவிட்ட உதாரணம் தருகின்றார். ஆனால் சீனா தோல்வி அடையவில்லை. ஸோவியத் நாடுகள் திருப்பித் தாக்குகின்றன, என்பதை மறந்துவிட்டார். யுத்தத்தில் பாஸிஸத்தை எதிர்த்துத் தோற்கடிக்க வேண்டுமானால் மக்களைத் திரட்டவேண்டும், அதற்குத் தக்க உரிமைகளை மக்கள் அடைவார்கள் என்பதை உணருவது கிரான் போர்ன் பிரபுக்கு எளிதானதல்ல.

## சர்வாதிகாரி டார்லான்

சோவியத் மக்களின் திரண்ட ஐக்கிய பலத்துடன் தங்கு தடையின்றி செஞ்சேனை முன்னேறிவரும்போது வட ஆப்பிரிக்காவில் பிரிட்டிஷ் அமெரிக்கப் படைகளின் முன்னேற்றத்தோடு "டார்லான்" பிரச்சினை ஒன்று கிளம்பிவிட்டது. முதலில் இந்த அட்மிரல் டார்லான் பிரெஞ்சு கடற்படையின் தலைவனாயிருந்தவன். பிரான்ஸ் வீழ்ச்சியுற்றபோது ஹிட்லருக்கு உடந்தையான கோஷ்டியைச் சேர்ந்தவன். மார்ஷல் பெடெய்னுக்கு வலக்கையாக இருந்து நெடுங்காலம் பிரெஞ்சு மக்களை நாஜி ஏகாதிபத்தியம் அடிமைப்படுத்தி வைத்ததில் பங்கு எடுத்துக்கொண்டவன். ஆனால், பிரிட்டிஷ் அமெரிக்கப்படைகள் சென்ற மாதம் முன்னேற ஆரம்பித்தவுடன் பெடெயின் சர்க்காரை விட்டு நழுவிவிட்டான். வட ஆப்பிரிக்காவில் அதிகாரத்திலிருந்தமுறையில் ஐக்கிய நாடுகளோடு சேருவதாகவும் ஹிட்லரை எதிர்ப்பதாகவும் கூறினான். வட ஆப்பிரிக்க பிரதேசங்களில் 'விரைவில் ராணுவவெற்றிகளை அடைவதற்காக டார்லானையும் ஒப்புக்கொள்ளுவதாக அமெரிக்க அறிக்கைஒன்று வெளிவந்தது. ஆனால் டார்லான் சும்மா இருக்கவில்லை. பிரெஞ்சு சாம்ராஜ்யத்திற்குத் தானே இனி சர்வாதிகாரம்பெற்ற தலைவன் என்றும், ஆல்ஜியர்ஸ் என்னும் வடஆப்பிரிக்க நகரமே இனி பிரெஞ்சு சாம்ராஜ்யத்தின் தலைநகரம் என்றும் விளம்பரம் செய்திருக்கிறான். ஹிட்லரை எதிர்ப்பதாகக் கூறிக்கொண்டு தானிருக்கிறான். அமெரிக்காவுடன் நட்பை நாடுவதாகவே சொல்லுகிறான். இதே சமயத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம்இவனைப்பற்றிமெல்லவும் முடியாமல் முழுங்கவும் முடியாமல் தவிக்கிறது. டார்லான் விளம்பரத்திற்குத் தங்கள் ஆதரவு இருக்காது என்று மட்டும் மொட்டையாகப் பேசியிருக்கிறார் பிரிட்டிஷ் மந்திரி ஈடன். இதுவரை ஹிட்லருக்கு உடந்தையாயிருந்த ஒருவனை திடீரென்று வரவேற்று முக்கிய பதவியில் ஒப்புக்கொள்ளலாமா என்ற பொதுமக்களின் கேள்விக்கு அமெரிக்காவிலும் பிரிட்டனிலும் அரசாங்கங்கள் பதில் சொல்லியாகவேண்டும். டார்லானை ஆதரிப்பதா, டி'காலை ஆதரிப்பதா என்ற முரண்பாடும் ஏற்பட்டுள்ளது. அமெரிக்க அரசாங்கத்தின் நோக்கமும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நோக்கமும் ஒன்றுக்கொன்று மோதுகின்றன. இத்தகைய முரண்பாடுகள் யுத்தத்தை வெற்றிகரமாய் விரைவில் முடிப்பதற்கும் நாஸிகளை அடியோடு வீழ்த்துவதற்கும் முட்டுக்கட்டையா யிருக்கின்றன. இத்தகைய பிற்போக்கு சக்திகளை உலக மக்கள் அனுமதிக்கமாட்டார்கள்.

# உரிமைகளைக் காக்க உற்பத்தியைப் பெருக்க

## திருத்தங்களின்றித் தொழிற் சச்சரவு மசோதா பயனற்றது

### மாகாணக் கமிட்டியின் விமர்சனம்

[சென்னை சர்க்கார் "தொழில் தகராறு மசோதா" என்றொரு மசோதாவைச் சென்ற வாரம் பிரசுரித்திருக்கிறது. அதைப் பற்றி ஆக்ஷேபனைகளோ, திருத்தங்களோ ஏதாவது இருந்தால் இம்மாதம் 25உக்குள் அனுப்ப வேண்டும் என்றும் அறிக்கை வெளியிட்டிருக்கிறது.

இந்தியத் தொழிலாளி உலகிலேயே மிகவும் மோசமான நிலையில் இருக்கிறான். நாகரீக வாழ்க்கைக்குரித்தான வாழ்க்கை வசதிகள் ஒன்றும், அவனுக்குக் கிடையாது. நீண்ட காலமாக சாதாரண உரிமைகளுக்காக சட்டம் வேண்டுமென இந்தியத் தொழிற்சங்க இயக்கம் கிளர்ச்சி செய்து வந்திருக்கிறது.

சாதாரணத் தொழிற் சங்க அங்கீகார உரிமையும் அவனுக்குக் கிடைக்கவில்லை. தொழிற்சங்கம், முதலாளிக்கு ஏதாவது கடிதம் எழுதினால், கடிதம் திருப்பி அனுப்பப்படுகிறது. அதை பெற்றுக் கொள்ளவும், முதலாளிகள் மறுக்கின்றனர். இப்படிப்பட்ட நிலைமையில், சில்லரைக் குறைகளைப் போக்கிக் கொள்ளவும், வேலை நிறுத்தத்தைத் தவிர வேறு வழியில்லை.

இவ்வாறு ஜீவாதார உரிமைகளை அளிப்பதற்குப் பதிலாக, சென்னை சர்க்காரின் மசோதா, இருக்கும் உரிமையையும், வேலை நிறுத்த உரிமையையும்—நிரந்தரமாகப் பறிமுதல் செய்கிறது.

இந்த மசோதாவைக் குறித்து இந்தியக்கம்யூனிஸ்டுக் கட்சியின் தமிழ் மாகாணக் கமிட்டி நிறைவேற்றியுள்ள தீர்மானத்தை கீழே கொடுத்திருக்கிறோம்.

நாடெங்கும் இதை அடிப்படையாகக் கொண்டு பலத்த கிளர்ச்சி நடத்தப்பட வேண்டும். தொழிலாளி மக்களின் ஏகோபித்த, ஸ்தாபன ரீதியான பலத்தைக் கொண்டு, இந்த மசோதாவிலுள்ள மோசமான ஷரத்துகளையெல்லாம் மாற்றியமைக்க முடியும்; மாற்ற வேண்டும்.

மாகாணத்திலுள்ள தொழிற் சங்கங்களும் தோழர்களும், உடனடியாக இந்தத் துறையில் ஈடுபடுவார்களாக. ப—ர்]

சட்ட சபைகள் எல்லாம் நடைபெறாத இன்று சென்னையிலிருக்கும் அட்வைசர்களின் அரசாங்கம் இந்த மாகாணத்திலுள்ள லட்சக் கணக்கான தொழிலாளர்களின் வாழ்க்கையை வெகுவாகப் பாதிக்கும் ஒரு மசோதாவைச் சட்டமாக்க முயன்று வருகிறது. இந்த தொழில் தகராறு மசோதாவைப் பிரசுரம் செய்கையில் இதன் லட்சியங்களையும் நோக்கங்களையும் சென்னை சர்க்கார் வெளிப்படுத்தியிருக்கிறார்கள். நீண்டகால வேலை நிறுத்தங்களும், கதவடைப்புகளும் ஏற்பட்டு உற்பத்தி தடைப்படுவதைத் தவிர்ப்பதே இந்த மசோதாவின் முக்கிய லட்சியமாம்.

தொழிலாளி வர்க்கத்தின் ராஜிய முன்னணியான கம்யூனிஸ்டுக் கட்சி (தேசத்தின் முன் காணப்படும் பயங்கர நெருக்கடி ஏற்பட்டிருக்கும் இன்று) உற்பத்தி தங்கு தடையின்றி நடைபெற வேண்டும் என்பதோடு மட்டுமல்லாமல் இன்றுள்ளதைக் காட்டிலும் உற்பத்தியை துரிதப்படுத்த வேண்டும் என்று விரும்புகின்றது. உலக மக்கள் இந்த யுத்தத்தில் வெற்றியடைவதற்கான பணியில் தொழிலாளி வர்க்கத்துக்குள்ள மகத்தான பங்கு என்ன என்பதை நமது கட்சி உணர்ந்திருக்கிறது. ஆனால் உற்பத்திக்காகத் தொழிலாளிகளை வெற்றிகரமாகத் திரட்ட வேண்டும் என்ற காரணத்தினாலேயே அவர்கள் தங்களது மூலாதாரமான கோரிக்கைகளைப் பெற வேண்டுவது அத்தியாவசிய மாகின்றது. தொழிலாளிகளுடைய உரிமைகளை ஒடுக்குவதும், அவர்களது ஸ்தாபன பலத்தைக் குலைப்பதுமான எல்லாச் சட்டங்களும், நிர்வாகச் செயல்களும், பாசிஸ்டு ஆக்கிரமிப்பாளரின் வலையிலே நேரடியாக வீழ்த்துவதாகும்.

### உரிமைகள் குறைவே

இந்தியத் தொழிலாளிகளுக்குள்ள சட்ட ரீதியான உரிமைகள் மிகக் குறைவு என்பது யாவருமறிந்ததே. ஜெனிவாவில் நடைபெறும் தொழில் மகாநாடுகளின் சிபார்சுகளைக் கூட இந்திய சர்க்கார் ஏற்றுக்கொண்டு எதுவும் செய்யவில்லை. மிகவும் வளர்ச்சியடைந்த ஸ்திரமான தொழில்களிலே ஈடுபட்டிருக்கும் தொழிலாளருக்கும் கூட வேலையில்லாக் காலத்தில் உதவி நிதி, நோய்வாய்ப்பட்டால் உதவி நிதி போன்ற உரிமைகள் ஒன்றும் கிடையாது. கூட்டு முறையில் பேரம், கூட்டாக ஒப்பந்தங்கள் இவற்றை சர்க்கார் நிர்ப்பந்தமாக்கியிருக்கிறார்கள். இந்தியத் தொழிலாளிக்கு வாழ்க்கைக்கான குறைந்த பக்ஷச் சம்பளம் நிச்சயிக்கப்படவில்லை, தொழிற்சங்க வேலைகளிலே கலந்துகொண்ட காரணத்திற்காகத் தொழிலாளர்கள் டிஸ்மிஸ் செய்யப்படுவதை நிறுத்தச் சட்டபூர்வமான உரிமை இல்லை. தொழிற் சங்கங்களை அங்கீகாரம் செய்யும் அடிப்படையான உரிமையும் கூட மறுக்கப்படுகின்றது.

பாசிஸ்டு ஆக்கிரமிப்பை எதிர்த்து தொழிலாளர்களை பரிபூரணமாகத் திரட்ட வேண்டியது பரம முக்கியமான இந்தக் காலத்தில் தேச முழுவதும் ஒரே ரீதியில் பஞ்சப்படி சம்பந்தமான திட்டம் வகுக்கப்பட வேண்டும். பஞ்சப்படியை நிர்ணயம் செய்வதில் அடிப்படையாகக் கவனிக்க வேண்டிய கொள்கைகள் எவை! தொழிலாளர்களின் உண்மையான சம்பளத்தில் குறைவுவரக் கூடாது. பணத்தின் வாங்கும் சக்தியில் ஏற்படும் குறைவைச் சரிக்கட்டும் முறையில் வேறு எந்தக் காரணங்களையும் கருதாமல் பஞ்சப்படியை நிர்ணயிக்க வேண்டும்.

### தொழிற்சாலைக் கமிட்டிகள்

தேசத்தின் பாதுகாப்புக்கும், தேச ஜனங்களின் தேவைகளுக்கும் உயிர்நாடியான உற்பத்தியில் தொழிலாளர்களுக்குப் பிரம்மாண்டமான பொறுப்பிருக்கிறது என்ற உண்மையை உணர்ந்தாக வேண்டும். ஆகவே அவர்களது பரிபூர்ண ஒத்துழைப்பை நாடவேண்டும். உற்பத்தியில் தலைகாட்டும் பலவிதமான பிரச்சினைகளைத் தீர்ப்பதற்காக ஒவ்வொரு தொழிற்சாலைகளிலும், ஒவ்வொரு இலாகாவிலும், தொழிலாளர்களின் பிரதிநிதிகளும், முதலாளிகளின் பிரதிநிதிகளும் கொண்ட கமிட்டிகளைச் சட்டபூர்வமாக நியமிக்க வேண்டும்.

உற்பத்தி ஒழுங்காக நடைபெறவேண்டுமானால் இந்த அடிப்படையான பிரச்சினைகளைத் தீர்த்தாகவேண்டும். மனிதனைப் போல வாழ்வதற்கும் கூட வேண்டியவசதிகளுக்கு உறுதியளிக்காமல், தொழிலாளரின் சர்வசாதாரணமான உரிமைகளைக் கூட அனுமதியாமல் வேலை நிறுத்தங்களைத் தடை செய்யும். வெறும் சட்டம் ஒன்று செய்வதால் இந்த லட்சியம் ஈடேறப்போவதில்லை.

இந்தச் சென்னை மசோதா மேற்கூறிய தொழிலாளர்களின் அடிப்படையான கோரிக்கைகளை ஆலோசனைக்கேஎடுக்கவில்லை. இதன் நோக்கம் மிகவும் குறுகியதே. இதன் முக்கிய நோக்கம் சமரசத்திற்காகவும் சில சந்தர்ப்பங்களில் நிர்ப்பந்தமான முடிவுகளைச் செய்யவும் ஒரு கருவியை ஏற்படுத்துவதே யாகும். இந்த மசோதா தொழில் சமாதானத்தைப்பற்றி ஒருதலைப்பட்ச மனோபாவத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளது. தொழில் சமாதானத்தைக் குலைப்பவர்கள் தொழிலாளிகள் தான் என்ற ஒருபட்சமான பொய்யான வாதத்தை அடிப்படையாகக் கொண்டது. இது தொழிலாளர்களின் உரிமைகளையும், ஸ்தாபன சக்தியையும் நசுக்க முயல்கிறது.

### சமரசத்திற்குத் தயார் ஆனால்?

சமரசத்திற்கான எந்தத் திட்டத்தையும் தொழிலாளர்கள் வரவேற்கிறார்கள். ஆனால், அது இருகட்சியினருக்கும் இடையே சமரசம் ஏற்படுத்துவதற்காக உண்மையான முயற்சியாயிருக்கவேண்டும். அவர்களுடைய நேரடியான போராட்ட உரிமையை (வேலை நிறுத்த உரிமையை) குறைப்பதாக மாத்திரம் இருக்கக் கூடாது.

இந்த மசோதா வேலைநிறுத்தங்களைக் குற்றமாகக் கருதுகிறது. தொழிற் சங்க அங்கீகாரம்கூடக் கொடுக்காமல் தொழிலாளர்கள் எடுத்துக்கொள்ளக்கூடிய நடவடிக்கைகளைப் பாதிக்கிறது.

தொழிற் சங்க அங்கிகாரம் என்பது தொழிலாளி வர்க்கத்தின் சர்வசாதாரண உரிமை. இந்த உரிமை எந்த அளவிற்கு உத்திரவாதமாக அளிக்கப்படுகிறதோ, அந்த அளவிற்கு தொழிலாளிகளின் ஜீவாதாரக் கோரிக்கைகளைப் பெறுவதற்கு அது உதவியாயிருக்கிறது. அதுதான் தொழில்களில் சமாதானத்தை ஏற்படுத்துவதில் உதவி யளிக்கும்.

இந்த முதன்மையான உரிமையைக் கொடுக்காமல் தொழிலாளிகளின் கடைசி ஆயுதமான வேலை நிறுத்த உரிமையைப் பறிக்கிறது இந்த மசோதா. இதுதான் இந்த மசோதாவிலுள்ள அடிப்படையான குறைபாடு; மிகவும் படுமோசமான தன்மை.

சமரசம் சம்பந்தமாக இந்த மசோதாவிலுள்ள ஷரத்துக்களை விபரமாக ஆராய்வோம்.

### நூற்றுக்குப் பதினைந்து போதாதா?

இந்த மசோதாவின் ஆறுவது ஷரத்து 250 அல்லது அதற்கு மேற்பட்ட தொழிலாளிகள் வேலை செய்யும் தொழிற்சாலைகளிலுள்ள நிரந்தரச் சட்டங்களைப்பற்றியதாகும். இந்த நிரந்தரச் சட்டங்கள் பிரதம சமரச அதிகாரியின் சம்மதத்தைப் பெற்றிருக்கவேண்டும். இந்தச் சட்டங்களைப் பற்றியவரையில் அவருக்கு சர்வ அதிகாரமும் உண்டு. 250 தொழிலாளிகளுக்குமேல் உழைக்கும் தொழிற் ஸ்தாபனங்களுக்குத்தான் இச்சட்டம் என்று கூறுவதே சரியான முறையல்ல. நிரந்தர சட்டமென்ற முறையில் நிறைவேற்றப்படும் இச்சட்டம் எத்தகைய தொழிலிலும் ஏற்படும் தொழிற் சச்சரவுகளைத் தவிர்ப்பதற்கு உதவாவிடில் 250 பேருக்கு குறைந்த தொழிலாளிகள்கொண்ட ஸ்தாபனங்களில் தொழிலாளிகளைப் பழைய நிலைமையிலேயே விட்டமாதிரிதான்.

ஒரு தொழிற்சங்கம் தொழிலாளிகளின் பிரதிநிதியாக அங்கீகரிக்கப்பட வேண்டுமானால்(சமரசக்கோர்ட்டில் முதலாளியால் அல்ல) அத்தொழிலில் ஈடுபட்டிருப்போரில் குறைந்தபட்சம் நூற்றுக்கு முப்பது பேராவது சங்கத்தில் அங்கத்தினர்களாயிருக்கவேண்டுமென்று இச்சட்டம் விதிக்கிறது.

இந்த அளவுமிகவும் அதிகமானது என்பதும்; இது சட்டமானால், தொழிற் சங்கங்கள், தொழில் தகராறுகளில் உருப்படியான முறையில் தலையிடுவதையே இது தடுத்துவிடும் என்பதும், தொழிற்சங்க இயக்கத்தில் ஈடுபட்டுள்ள யாருக்கும் தெரியும். ஒரு நூற்றாண்டுக்கு மேலாக வளர்ச்சி பெற்றுள்ள தொழிற்சங்க இயக்கத்தைக் கொண்டுள்ள பிரிட்டனிலேயே, 1939 ஹூ யுத்தம் ஏற்படுவதற்கு முன் வரையில், சராசரியாக தொழிற்சங்கங்களில் சேர்ந்துள்ள தொழிலாளிகள் இந்த அளவிற்கு இல்லை. தொழிலபிவிருத்தியில் சிகரமாக விளங்கும் அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் கூட ஸ்தாபன ரீதியாகத் தொழிற்சங்கத்தில் சேர்ந்துள்ள தொழிலாளிகள் 20 சதமானத்திற்கும் குறைவுதான்.

பீடித் தொழில் போன்ற வளர்ச்சியடையாத தொழில்களில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளருக்கு இந்த ஷரத்து மிகவும் பாதகம் விளைவிக்கும். இந்த ஷரத்துக்கு வேண்டிய அளவு சங்கத்தில் எண்ணிக்கை காட்டுவது கஷ்டம். தொழிலாளர் குறைகளை எடுத்துப் பேசுவதற்குத் தொழிற்சங்கம் இல்லாதவிடங்களில் வேலை செய்யும் தொழிலாளர்களில் 30 சதமானம் பேர் கையெழுத்துப் போட்டு நோட்டீஸ் கொடுக்கலாம் என்று கூறுகிறது ஒருஷரத்து. தொழிலாளிகள் பெரும்பான்மையரின் நிலைமையைக் காணுமிடத்து, அதிலும் குறிப்பாகபீடித்தொழில்போன்ற தொழில்களில்ஈடுபட்டிருபோரின்நிலைமையைக் காணும்போது, இந்த ஷரத்தைச் செயலளவிலே கொண்டுவர முடியாது என்பது தெட்டென விளங்கும். குறைந்தபட்சம் நூற்றுக்கு 30 பேர் இருக்கவேண்டும் என்ற ஷரத்தை நூற்றுக்கு 15 ஆக மாற்ற வேண்டுமெனக் கோருகிறோம்.

### கால வரையறையில்லை

இந்த மசோதா சமரசப் பேச்சுக்களுக்கு ஒரு காலவரையறை குறிப்பிடவில்லை. இதன்மூலம், வேலை நிறுத்த உரிமை, தொழிலாளர்களிடமிருந்து வரையற்ற காலத்திற்குப்பறிமுதல் செய்யப்படுகிறது. சமரசத்திற்காக ஏற்படும் காலதாமதத்தில் தொழிற்சங்கத்தில் தீவிரமாக ஈடுபட்டுள்ள தொழிலாளிகளைப் பழி வாங்கியும் இன்னும் நூற்றுக் கணக்கான இதர வகைகளில் தொழிலாளிகளை டிஸ்மிஸ் செய்து ஸ்தாபன பலத்தைச் சீர்குலைப்பதற்கும், முதலாளிகளுக்குச் சந்தர்ப்பத்தை இது சிருஷ்டித்துக் கொடுக்கிறது.

உயர்ந்த பட்சம் 15 நாட்கள் தான் சமரசப் பேச்சுக்கான காலமாக வரையறுக்கப்பட வேண்டும். ஆலோசனையிலிருக்கும் இந்த மசோதாவின் மிகவும் மோசமான ஷரத்து நிர்ப்பந்தமான மத்தியஸ்தத்தை பற்றியதாகும். தொழிலாளிகளுக்கு மற்றெல்லா வழிகளும் பயனற்றுப் போய்விட்ட பிறகு, கடைசியாக வேலை நிறுத்த ஆயுதத்தை உபயோகிப்பதன் மூலமாகவே, அவர்களுடைய கோரிக்கைகளைப் பெறுவது சாத்தியமாயிருக்கிறது. மசோதாவின் இந்தப் பகுதி, இந்த வேலைநிறுத்த உரிமையைப்பரிபூரணமாக மறுக்கிறது.

### வேலைநிறுத்த உரிமையை இழப்பதா?

இந்த உரிமையை இழந்த தொழிலாளிகள் சமரசக் கோர்ட்டாரின் மனப்போக்கிற்கு ஆளாக வேண்டியிருக்கிறது. வர்க்கப் பிரிவினைகளைக் கொண்ட இன்றைய சமூக அமைப்பில் வர்க்கங்களுக்கு, அதீதமான 'நீதி' என்று பேசுவதற்கு அர்த்தமே கிடையாது. சமாதானம், நீதி என்பதைப்பற்றி நிலவிவரும் அபிப்பிராயங்கள் தொழிலாளி முதலாளி சம்பந்தமாக நிலவிவரும் மனோபாவம், பணம், செல்வாக்கு ஆகியவற்றின் பலம், இவைகளெல்லாம் முதலாளித்துவத்திற்குச் சாதகமாகவே இருந்து வருகின்றன. தொழிலாளி வர்க்கத்தின் கையிலுள்ள சக்திவாய்ந்த ஆயுதம் வேலை நிறுத்தம் ஒன்றுதான். எல்லாம் முதலாளிகளுக்கே சாதகமாகஉள்ள இந்த சமூகத்தில், இந்த ஆயுதத்தை உபயோகிப்பதினாலேயே, அவர்களுக்கு வெற்றி ஏற்படும் என்ற நம்பிக்கை ஓரளவிற்காவது இருக்கிறது. ஆகவே, வேலை நிறுத்தம் என்ற இந்த ஜனநாயக உரிமையை நிரந்தரமாக இழக்க என்றைக்கும் சம்மதிக்க முடியாது,

தொழிலாளிகள் தங்களது வேலை நிறுத்த உரிமையை வைத்துக்கொண்டு விளையாடுபவர்களல்ல என்பதைத் தெளிவாக அறியவேண்டும். வேலை நிறுத்த காலத்தில் தீவிரமான கஷ்டங்களைத்தாங்க வேண்டும், தியாகங்களைச் செய்யவேண்டும் என்பதை அவர்கள் உணர்வார்கள். தொழிலாளிகளின் கோரிக்கைகள் நீதியானவை என்பதை முதலாளிக்கு எடுத்துக் காட்டத் தொழிலாளிகள் கையாளும் சர்வ முறைகளும்பயனில்லாமல் போனால் கடைசியாகத் தொழிலாளிகள் வேலை நிறுத்தத்தில் இறங்குகிறார்கள்.

இது ஒரு யுத்தகாலச் சட்டமல்ல என்பதை நாம் இந்த சந்தர்ப்பத்தில் நினைவில் வைக்கவேண்டும். யுத்தம் என்ற சாக்குக் கூறி நிர்ப்பந்தமாக சமரசம் ஏற்படுத்துவது நியாயமா என்ற விஷயம் ஒருபுறமிருக்கட்டும். ஏற்கெனவே இந்தியப் பாதுகாப்பு சட்டம் பகுதி 82 (1) பிரகாரம் இரு கட்சியினரையும் சமரசத்திற்குவரும்படி நிர்பந்திக்க சர்க்காருக்கு அதிகாரமிருக்கிறது. இந்த மசோதாவின் மூலமாக, "தொழில் சமாதானம்" என்ற பேரால், யுத்தத்தைக்காட்டி போடப்பட்ட இந்த அவசரச் சட்டத்தை, சென்னை சர்க்கார் நிரந்தரச் சட்ட புத்தகத்தில் புகுத்த முயற்சிக்கிறது.

### பஸ் தொழிலாளர் ஸ்டிரைக்கின் படிப்பினை

சமீப காலத்தில் நடைபெற்ற பஸ் தொழிலாளர் வேலைநிறுத்தத்தை சர்க்கார் எடுத்துக்காட்டுகிறது. இந்த வேலைநிறுத்தத்திலும் அதன் பின்னும் தொழிலாளிகள் பொல்லாத படிப்பினைகளை உணர்ந்தார்கள். சட்டதிட்டங்கள் என்ற கூட்டிலிருந்துகொண்டு தொழிலாளர் வாழ்வு பற்றி ஏதும் அறியாத தனி நபர்கள் நிர்ப்

(6-ம் பக்கம் பார்க்க)

# உணவை அளித்து ஊரைத் திரட்டுவோம்

### பஞ்ச நிலை ஏன்?

"அடுத்தமாதம் அரிசி கிடைக்குமா! கிடைத்தாலும் விலை எப்படி இருக்கும்!" என்ற கேள்விகளே இன்று எங்கு பார்த்தாலும், அரிசிக்கு மட்டுமல்ல பஞ்சம். துணிக்குக்கூடப் பஞ்சம். புளி, உப்பு, சர்க்கரை, மண்ணெண்ணை என்று சேர்த்துக் கொண்டால் நிலைமையின் நெருக்கடி எவ்வாறு முற்றி வருகிற தென்பது நன்கு விளங்கும்.

ஆனால் நெருக்கடியைக் கண்டு பயந்து குழம்பிக் கொண்டிருக்கக்கூடிய காலம் அல்ல இது. அன்னியப் படையெடுப்பு ஆபத்து எத்தகையது என்று உணருபவர்கள் சும்மாஇருக்க முடியாது. இந்தப் பஞ்சநிலை நீடிக்குமேயானால் படையெடுப்பு நெருங்க நெருங்கநாட்டில் குழப்பமும் அராஜகமும்தான்ஏற்படும். பாஸிஸப்பேய்களை வேற்றிகரமாய் எதிர்க்க வேண்டுமானல் உணவுப் பஞ்சத்தைத் தீர்ப்பது உடனடியான கடமை. ஊணின்றி உடையின்றித்தவிக்கும்மக்களைஉற்சாகப் படுத்தித் திரட்ட முடியாது. நாட்டை காக்கும் பணியில் அவர்கள் சிரத்தை காட்ட மாட்டார்கள்; மனச்சோர்வுற்று நிற்பார்கள். ஆனல் தேசபக்திகொண்ட ஒவ்வொரு இந்தியனும் இதில் கவலைகொள்ளாமலிருக்க முடியாது. உணவுப் பஞ்சத்தைத் தீர்த்துத்தானக வேண்டும்; நாட்டை இழந்துவிட முடியாது.

நமதுநாடு இன்னும் பாரதியார் கூறியபடி "கனியும் கிழங்கும் தான்யங்களும் கணக்கின்றித்தரு நாடு" தான். ஆயினும் ஏன் இந்தப் பஞ்சநிலை! எங்கு பார்த்தாலும் உற்பத்தி முறைகளில் கோளாறு, வினியோக முறைகளில் விபரீதம். உற்பத்தியிலாவது வினியோகத்திலாவது குறிப்பான, ஸ்திரமான திட்டம் கிடையாது. ராணுவத்திற் களிக்கப்படும் சப்ளைகளுக்கும் 'சிவில்' ஜனங்களின் தேவைகளுக்கும் முரண்பாடு. சில மொத்த வியாபாரிகள் தரகர்களின் லாபக் கொள்ளை.

### லாபக்கொள்ளை

லாபக் கொள்ளையைப்பற்றி எழுதினல் எவ்வளவோ எழுதலாம். யுத்தத்தைக் காரணமாகக்காட்டி சிலர் கொள்ளையடிப்பதைப் போன்ற தேசத்துரோகம் வேறு கிடையாது. பொதுமக்களின் துயரங்களைப் பற்றியும் நாட்டுப் பாதுகாப்பைப் பற்றியும் இவர்களுக்கு என்ன கவலை! சர்க்கார் இதில் தலையிட்டு விலைவாசிகளை நிர்ணயித்து சட்டத்தை மீறிய சில வியாபாரிகளின்மீது இங்குமங்கும் வழக்குகள் தொடர்ந்தும் எல்லோரையும்கட்டுப்படுத்த முடிவதில்லை. சரக்குகளின் சேமிப்பு இந்த மொத்த வியாபாரிகள் கையில்தான். விலைவாசிகளை இஷ்டம்போல் ஆட்டி வைப்பதும் இவர்கள்தான். விலைவாசிகள் சர்க்காரால் கட்டுப்படுத்தப்பட்ட பொருள்களெல்லாம் மார்க்கெட்டிலிருந்து மாயமாய் மறைந்துவிடும். சரக்குகளின், விலை விஷம்போல ஏறிக்கொண்டே போகும். ஜனங்கள் திண்டாடினலென்ன!

அரசாங்கம் ஏற்படுத்தியுள்ள விலைவாசி நிர்ணயம் பிரயோஜனமற்றது என்று அநுபவசாத்தியமாகவும் கண்டுவிட்டோம். உண்மையான விலைவாசி நிர்ணயமென்ருல் பொதுஜன நலனை அடிப்படியாகக் கொண்டு சரசமான விலைக்கு உணவுப் பொருள்கள் அகப்படும்படியாக இருக்க வேண்டும். பொதுமக்களின் வாங்கும் சக்தியை அடிப்படையாகக் கொள்ளாமல் வியாபாரிகள் குறிப்பிடும் தொகைகளை அடிப்படையாகக்கொண்ட விலைவாசி நிர்ணயம் சில மொத்த வியாபாரிகள் விலைவாசிகளை இஷ்டம்போல் அமைத்துக் கொள்ளத்தான் உதவுகின்றது. லாபம் அவர்களுக்கு, பட்டினி பாட்டாளிமக்களுக்கு. விலைவாசி நிர்ணயம் அவசியம் தான். ஆனல் இஷ்டப்பட்டவாறெல்லாம் நிர்ணயித்துப்பயனில்லை. பொதுமக்களின் பிரதிநிதிகளுடன் கலந்து நிர்ணயிக்கப்பட வேண்டும். தானிய விலை நிர்ணயம் விவசாயிகளுக்கு சரியான விலை கிட்டுமாறு இருக்கவேண்டும். மெஷின் சாமான்கள் சரசமான விலைக்கு அகப்படக்கூடியதாயிருக்கவேண்டும். அநியாய விலையை ஏழை விவசாயி விரும்புவதுமில்லை; அனுபவிப்பதுமில்லை. அநியாய விலையை விரும்பும் கோஷ்டி லாபக்கொள்ளையடிக்கும் பெருத்த வியாபாரிகளும் தரகர்களும் தான்.

### வாகன்கள் இல்லையாம்

தான்ய உற்பத்தி ஏராளமாயுள்ளது. ஆனல், போக்கு வரத்து சாதனங்கள் சரியாக இல்லாமல், 'வாகன்கள்' கிடைக்காமல், சரக்குகள் கிடங்குகளிலும் ரெயில்வே ஸ்டேஷன்களிலும் கிடக்கின்றன என்று சில அறிக்கைகளை சர்க்கார்வெளியிட்டுள்ளது. அப்படியானல் இந்த நிலைமையைப் போக்கி உணவுப்பொருள்கள் ஒவ்வொரு பிரதேசத்திற்கும் எட்டுமாறு எத்தகைய முயற்சியும் எடுத்துக்கொண்டதாகத் தெரியவில்லை. நெருக்கடியின் விளைவாக இங்குமங்கும் கொள்ளைகள் தலைகாட்ட ஆரம்பித்துவிட்டன. இவை பரவவொட்டாமல் தடுத்து மக்களின் குறைகளை நீக்கியாகவேண்டும். ராணுவத்தின் தேவைகள் பூர்த்தி செய்யப்பட வேண்டியது அவசியம். ஆனல் பொதுமக்களின் தேவைகளுக்கும் ராணுவத் தேவைகளுக்கும் முரண்பாடுள்ள முறையில் பொருள் விநியோக ஏற்பாடுகள் இல்லாமல் அமைக்கப்பட வேண்டும்.

### பொதுஜனக் கமிட்டிகள் தேவை

இந்தியாவின் உணவு நிலைமையைப் பற்றி ஆலோசிப்பதற்காக இம்மாதம் மாகாணப் பிரதிநிதிகள் கொண்ட ஒரு மகாநாடு டெல்லியில் சர்க்காரால் கூட்டப் படுமென ஒரு அறிக்கை வெளிவந்திருக்கிறது. இதுமட்டும் போதாது. பொதுமக்க

## பஞ்சத்தை அகற்றுங்கள்

ளுக்கும் விநியோகத்தில் பொறுப்பிருந்தாலொழிய நிலைமையைச் சமாளிப்பது கஷ்டம். உதாரணமாக இன்றுள்ள விலைவாசி நிர்ணயக் கமிட்டிகளில் பெரும்பாலும் சர்க்கார் அதிகாரிகளும் பெருத்த வியாபாரிகளும் இருக்கின்ருர்களே தவிர உண்மையான பொதுஜனப் பிரதிநிதிகள் கிடையாது. பொதுஜனப் பிரதிநிதிகள் வேண்டுமென்ருல் இத்தகைய கமிட்டிகளை சர்க்கார் சுட்டிக்காட்டி வேறு கமிட்டிகளை அனுமதிக்க மறுக்கின்றது. மேலும் இன்றுள்ள கமிட்டிகள் நிர்ணயிக்கும் விலைகளுக்கு மேலேயே பொருள்கள் விற்கப்படுவதும், அநேக பொருள்கள் அகப்படாமலேயே போவதும் சகஜமாய்ப் போய்விட்டது. இந்த நிலைமை பொருளாதாரச் சீர்குலைவு ஏற்படாமலிருக்கவேண்டுமென்ருல் அரசாங்கம் மேலும் மேலும் பொதுஜனஒத்துழைப்பை நாடவேண்டும்.

பொதுமக்களின் ஒற்றுமை சக்தியிற் பிறந்த தேசீய சர்க்கார் மூலம் நமது உற்பத்தியைப் பன்மடங்கு பெருக்க முடியும். அநியாய விலைகளைக் குறைக்க முடியும், உணவுப் பஞ்சத்தைத் தீர்க்க முடியும், ஆனல் இன்று நாம் உடனடியாகச் செய்யவேண்டிய வேலை என்ன! பொதுமக்களின் கையில் விலைவாசி நிர்ணயமும், பொருள் விநியோகமு மிருந்தாலொழிய உணவுப் பஞ்சத்தை அகற்றுவது லேசான காரியமல்ல. இதை முன்னிட்டு கீழ்க்கண்ட முறையில் ஆலோசனைகளடங்கிய தீர்மானங்களும் மகஜர்களும் பொதுமக்களின் கோரிக்கைகளாக சர்க்காருக்கு அனுப்பிவைத்து ஏற்றுக்கொள்ளும்படி வற்புறுத்தவேண்டும்.

### நமது கோரிக்கைகள்

நாட்டின் பாதுகாப்பை உத்தேசித்து, அவசியமான இந்தப் பிரச்சினையைத் தீர்ப்பதற்காக சர்க்கார் உடனடியாகக் கீழ்க்கண்ட நடவடிக்கைகளை எடுத்துக்

## படையெடுப்பை வீழ்த்துங்கள்

கொள்ளவேண்டும் என்று நாங்கள் கோருகிறோம்.

I

(1) ஒவ்வொரு ஜில்லாவிற்கும், மாகாணத்திற்கும், தாலூக்காவிற்கும் 2,000க்கு மேற்பட்ட ஜனத்தொகையுள்ள கிராமங்களுக்கும் ஜனங்களின் பிரதிநிதிகளைக் கொண்ட உணவுக் கமிட்டிகள், உடனடியாக ஏற்படுத்தவேண்டும். உணவுப் பொருள்களின் விலைவாசிகளை நிர்ணயிக்கவும், அந்தந்தப் பிரதேசத்திற்குஎவ்வளவு தேவை, எவ்வளவு பொருள்கள் அனுப்பப்படவேண்டும். எந்த வியாபாரிகளுக்கு அனுப்பவேண்டும், யார் யார் விற்கவேண்டும், என்பதை யெல்லாம், திட்டம் வகுத்து, நிர்ணயிக்கும் பொறுப்பும், அதிகாரமும் இக்கமிட்டிகளின் கையில் ஒப்படைக்கவேண்டும்.

(2) மொத்த வியாபாரிகளின் சரக்குகள், ரிஜிஸ்டர் செய்யப்பட்ட கிடங்குகளில் தான் வைக்கப்படவேண்டும். இந்தக் கிடங்குகளைக் கண்காணிக்கும் அதிகாரம், உணவுக் கமிட்டிகளுக்கு அளிக்கப்பட வேண்டும்.

(3) மேலும், போக்கு வரத்து பிரச்சினைகளைத் தீர்ப்பதற்காக, நிபுணர்களும், பொதுஜன ஸ்தாபனங்களின் பிரதிநிதிகளும் அடங்கிய கமிட்டிகள் உணவுக் கமிட்டிகளைப்போன்று ஏற்படுத்தப்பட வேண்டும்.

(4) சர்க்கார், 2,000 ஜனத்தொகையைக் கொண்ட பிரதேசங்களிலெல்லாம், நிர்ணயிக்கப்பட்ட விலைகளில் விற்பனை நடக்கும்படியான கடைகளைத் தாங்களாகவே ஏற்படுத்தவேண்டும். சில்லரை வியாபாரிகள் தொழில்களை இழக்காமல் பாதுகாக்கவேண்டும். ஆகையால், எங்கெந்த சில்லரை வியாபாரிகள், உணவுக் கமிட்டிகளால் நிர்ணயிக்கப்படும் விலைக்குப் பொருள்களை விற்பனை செய்ய சம்மதிக்கிருர்களோ, அவர்களுக்கெல்லாம் சரக்குகள் கிடைக்குமாறு செய்து; அவர்கள் கடைகளை நடத்த சவுகரியம் அளிக்க வேண்டும்.

(5) வியாபாரிகள் மோசம் செய்யாமல் பாதுகாத்துக்கொள்வதற்காக, அவர்களுடைய ஸ்டாக்குகளை அவ்வப்போது கணக்குப் பார்ப்பதற்காகவும், அவர்கள் விற்பனை செய்ய மறுத்தால், நிர்ப்பந்த படுத்துவதற்கும், சட்டபூர்வமான அதிகாரங்கள், உணவுக் கமிட்டிகளுக்கு அளிக்கப்படவேண்டும்.

II

இன்று நாட்டில் உணவுப்பொருள்களின் விளைவை அதிகரிப்பதற்காக, விவசாயிகளுக்கு உடனடியாக ஊக்கத்தையும், உற்சாகத்தையும் அளிக்கவேண்டியது அவசியம். இதன்பொருட்டு, சர்க்கார் உடனடியாகக் கீழ்க்கண்ட நடவடிக்கைகளை எடுக்கவேண்டும்.

(1) உடனடியாக, யுத்தம் முடியும்வரையிலும், அதற்கப்பால் இரண்டு வருஷங்கள் வரையிலும், கடன் வாய்தா எல்லா விவசாயிகளுக்கும் அளிக்கப்பட வேண்டும். இல்லாவிடில், எவ்வளவு அதிகம் உற்பத்தி செய்தாலும்; கடன்காரன் தானே கட்டிக்கொள்ளப் போகிருன் என்ற எண்ணத்தினல், விவசாயிகளுக்கு உணவுப் பொருள்களை அதிகம் உற்பத்தி செய்ய ஊக்கமில்லாமல் போகிறது.

(2) விவசாயிகள் உற்பத்தி செய்யும் பொருள்களுக்குக், குறைந்தபக்ஷ விலைவாசிகள் நிர்ணயிக்கப்பட வேண்டும். இந்தச் சரக்குகள் மார்க்கெட்டில் கடைகளில் விற்பணைக்காக நிர்ணயிக்கப்பட்டுள்ள விலையில் 100க்கு 80 பங்குக்குக் குறையாமல் இந்த விலைவாசிகள் நிர்ணயிக்கப்படவேண்டும்.

(3) தர்க்காஸ்து நிலங்களெல்லாம், நிலமில்லாத விவசாயிகளுக்கும் சிறிதளவு நிலமுள்ள சிறு குடியானவர்களுக்கும் அளிக்கப்பட வேண்டும். அதோடு, அந்நிலங்களுக்கு அடுத்த 5 வருஷங்களுக்கு எவ்வித வரியும் கூடாது. அந்நிலங்களைச் சாகுபடி செய்வதற்கு வேண்டி, அந்த விவசாயிகளுக்குத் தேவையான பணத்தை, சர்க்கார் கடனக அளிக்கவேண்டும்.

(4) இன்று நமது மாகாணத்தில் பருவகாலத்தில் மழை பெய்யாததால், மகசூல் மிகவும் மோசமாய் விட்டது. ஆகவே, இந்த வருஷம் செலுத்தவேண்டிய நிலவரியும், நில வாடகையும், (ஜமீந்தார் பிரதேசங்களில்) பூராவாக வஜா செய்யப்பட வேண்டும். மேற்கூறிய கோரிக்கைகளை சர்க்கார் உடனடியாக ஏற்றுக்கொள்ளாவிடில், தேசத்தில் கொடும் பஞ்சம் ஏற்படும் என்பதை வற்புறுத்துகிறோம். நாட்டில் பொருளாதார வாழ்க்கைச் சீர்குலையும்; குழப்பங்கள் ஏற்படும்; படையெடுப்பாளனுக்கு சாதகமான நிலைமையை ஏற்படுத்தும் என்பதையும் வற்புறுத்த விரும்புகிறோம். ஆகவே, இந்தப் பிரச்சினையைத் தீர்ப்பதில் எந்த தனிப்பட்ட நபர்களின் சொந்த லாபமும் குறுக்கே நிற்கக் கூடாது.

---

## வைசிராயின் போக்கு

### கோவை மாணவர் கண்டனம்

டிசம்பர் இரண்டாம் தேதி நடைபெற்ற கோவை மாணவர் சங்கத்தின் கமிட்டிக் கூட்டம் காந்திஜியைக் காண்பதற்கு ராஜாஜிக்கு அனுமதி கொடுக்காதது பற்றி வைசிராயின் போக்கைக் கண்டித்து ஒரு தீர்மானம் செய்தது. "ராஜாஜீ லீகுக்கும் காங்கிரஸிற்கும் ஒரு சமரசத்தைக் கொண்டுவர விரும்பினர். ஆனல் இந்தியப் பிரச்னையைத் தீர்ப்பதற்காக எடுக்கப்படும் எல்லா முயற்சிகளுக்கும் அதிகார வர்க்கம் முட்டுக்கட்டை போட்டே வருகிறது. வைசிராயின் மறுப்பின் அர்த்தம்என்ன! இந்திய மக்களுக்கு அதிகாரத்தைத் மாற்றுவதற்கு அதிகார வர்க்கத்திற்கு விருப்பம் இல்லை என்பதே. இந்தச் செயலைக்கண்டு அச்சு நாடுகள் சந்தோஷப்படும். ஏன்! அவர்களை எதிர்க்க இந்தியமக்கள் ஒன்று திரளுவதை அதிகார வர்க்கத்தின் முட்டுக்கட்டை தவிர்த்து விடுமல்லவா! பாசிஸத்தை எதிர்த்துப் போராடுவதில் உறுதி பூண்டுள்ள நாற்பது கோடி மக்களின் தலைவிதியோடு விளையாடுவதே இந்தச் செயல்.

இந்திய மக்களின் எல்லாப் பகுதியினருடைய நம்பிக்கைக்கும் பாத்திரமான ஒரு தேசீய சர்க்கார் தான், ஆக்கிரமிப்பை எதிர்த்து நிற்கச் சபதம் பூண்ட மக்களையும், தேசத்தின் சக்தி முழுவதையும் திரட்டி ஜப்பானிய ஆக்கிரமிப்பை முறியடிக்க முடியும். ஆகவே காந்திஜியைக் கண்டு காங்கிரஸ்லீக் சமரசத்திற்கு முயல ராஜாஜிக்கு அனுமதி கொடுக்கப்பட வேண்டுமென்று இக்கமிட்டி தீர்மானிக்கிறது."

---

## உணவுக் கமிட்டிகள் நிறுவுக!

### குண்டக்கல் ரயில்வேத் தொழிலாளர் தீர்மானம்

எம். அண்டு எஸ். எம். ரயில்வேத் தொழிலாளர் சங்கத்தின் குண்டக்கல் கிளையின் சார்பில் டிசம்பர் 1ந் தேதி மாலை எஸ். குருசாமியின் தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. பின்வரும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:-

1, விலைவாசி நிலவரத்துக்குத் தகுந்தபடி பஞ்சப்படி கொடுக்க வேண்டும். பஞ்சப்படி கொடுக்கப்படாத தொழிலாளிகளுக்குப் பஞ்சப்படி அளிக்க வேண்டும். ராவ் கமிட்டியின் (தொழிலாளர்களின் வாழ்க்கை நிலையை விசாரித்த கமிட்டி) சிபார்சுப்படி குறைந்த சம்பளம் வாங்குவோருக்கு ஒரே தரமான பஞ்சப்படி அளிக்கப்பட வேண்டும்.

2. தொழிலாளருக்கு வேண்டிய உணவுப் பொருள்களும், வாழ்க்கைக்கு வேண்டிய பிற சாதனங்களும் கிடைப்பதற்காகவும், லாபக்கொள்ளையைத் தடுக்கவும் கள்ள மார்க்கெட்டுகளை ஒழிக்கவும்தொழிலாளர்களின் பிரதிநிதிகளைக்கொண்ட உணவுக் கமிட்டிகள் நிறுவ வேண்டி மத்திய அரசாங்கத்திடமும் மாகாண சர்க்காரிடமும் சங்கம்வேண்டியமுயற்சிகளை எடுத்துக்கொள்ள வேண்டும்.

---

### திருச்சி மில் முதலாளிகள் அட்டகாசம்

திருச்சிமில் முதலாளிகள் தொழிலாளர் சங்கத்தில் முன்னணியில் நிற்கும் தொழிலாளிகளை டிஸ்மிஸ் செய்திருக்கிருர்கள். கிருஷ்ணசாமி என்பவர் ஒருதொழிலாளி. அவரிடத்தில் சங்கத்திற்குச்சந்தாப் பணம் கட்டிய ரசீதுகள் இரண்டு இருந்தன. மானேஜர் உடனே பார்த்து விசாரித்தார். உடனே அந்தத் தொழிலாளியின் வீட்டுக்குப்போய் ரசீது புத்தகத்தை மானேஜரின் கையாட்கள் எடுத்துக்கொண்டு வந்தார்கள். சென்ற மாதம் 16-ந் தேதி அவரை டிஸ்மிஸ் செய்து விட்டார்கள். அதோடு கூட நிற்கவில்லை. அவரது மனைவி, தாய் இருவரையும் வேலையைவிட்டு நீக்கி விட்டார்கள். இன்னுமொரு ஸ்திரீ தொழிலாளிக்கும் இதே கதிதான்.

சங்கத்தில் வேலை செய்தார்கள் என்ற குற்றச்சாட்டுத் தான் காரணம். சங்கம் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட யூனியன். அதிலே வேலை செய்வதற்குச் சட்டபூர்வமான உரிமையுண்டு. சமரச முயற்சிகள் எதுவும் இன்னும் உருப்படியான பலன் தந்தபாடில்லை. தொழிலாளர்கள் பெரிய பரபரப்பும் ஆத்திரமும் கொண்டிருக்கிருர்கள். உடனே இவர்களைமீண்டும் வேலைக் கெடுத்துக் கொள்ளாவிட்டால் பதினன்கு நாட்களுக்குபின் வேலை நிறுத்தம் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுமென்று சங்கக் கமிட்டி மில் நிர்வாகத்திற்கும் அதிகாரிகளுக்கும் அறிவித்திருக்கிறது.

# ஒற்றுமைப் பணிக்கு ஓய்வில்லை

## கிஸான் கோட்டையில் ஒற்றுமை இயக்கம்

பீஹாரிலே வாழும் ஜனங்களில் எல்லாப் பகுதியினரிடமும் கலக்கம் தலைக்காட்டியிருந்தது. நமது தேசிய ஒற்றுமை இயக்கத்தின் பிரசாரம் அவர்கள் மத்தியில் மெதுவாகப் பரவி வந்தது. கண்மூடிகளான தேச பக்தர்களின் மின்னல் போராட்டம்' அதைத் தொடர்ந்துவந்த பயங்கர அடக்குமுறை ஏழைக் குடியானவர்களைத் திகைக்க வைத்தது. இதோடு கூடக் குடியானவர்களின் கடன் பளுவும் பஞ்சமும் வேறு/அவர்களை அலைக்கழித்தது.

நமது கம்யூனிஸ்டுத் தோழர்கள் பல கூட்டங்கள் கூட்டினார்கள். ஜமீன்தாரிகளை எதிர்த்துச் சரித்திரப் பிரசித்தமான போராட்டங்களை நடத்தியுள்ள பீஹார் கிஸான்கள் எதையும் சொன்னால் ஏற்றுக்கொள்பவர்களல்ல. நமது கூட்டங்களில் எல்லாம் அவர்கள் கேள்விகள் கேட்டார்கள். கூட்டங்கள் நடந்த பின்னல் கூட நமது தோழர்களிடம் வந்து பேசி சந்தேகங்களைத் தீர்த்து கொண்டார்கள். ஒற்றுமை இயக்கத்தால் நமது பொருளாதாரக் கஷ்டம் சீர்திருத்தமடையுமா, எங்களது கஷ்டங்கள் தொலையுமா? நமக்கு சுயராஜ்யம் கிடைத்து ஜப்பானை எதிர்த்துப் போராடமுடியுமா? என்று பல கேள்விகள் கேட்டார்கள். திருப்தியான பதிலைக் கேட்டுப் பின் திரும்பிப் போனார்கள். ஒற்றுமை இயக்கம் அடுப்படியிலிருந்த ஸ்திரீகளையெல்லாம் உற்சாகமூட்டி வெளியே கொண்டுவந்தது.

### எனக்காக அல்ல

பீஹார் கிஸான்களின் தலைவரான காரயானந்த சர்மா நமது கட்சி நிதிக்காக வேண்டுதல் செய்தார். 'நான் உங்கள்முன் இருக்கிறேன் என்பதை மறந்துவிடுங்கள். எனக்காக ஒன்றும் கொடுக்காதீர்கள். ஒற்றுமை வழி சுதந்திரத்திற்குக் கொண்டு போகும் பாதைதான என்பதை நீங்களே நினைத்துப்பாருங்கள். நீங்கள் ஒப்புக்கொண்டால் தேசமுற்றிலும் செய்ய வேண்டிய சேவையைத் தாங்கி நடத்தும் கம்யூனிஸ்டுக் கட்சிக்கு உதவுங்கள்" என்று அவர் ஏழை விவசாயிகளிடையே வேண்டினார். பழைய தியாகங்களையோ சேவைகளையோ காட்டிக் கேட்கவில்லை.

மாங்கீர் டவுனில் நடந்த பொதுக் கூட்டத்தில் ஸ்தல முஸ்லீம் லீக் தலைவர் நமது வழிதான் சரியென்பதைப் பகிரங்கமாக எடுத்துக்கூறி நமது முயற்சி வெற்றியடையவேண்டும் என்று வாழ்த்தினார். காங்கிரீஸ் தொண்டர்கள் பலர் தினசரி பாட்னாவிலுள்ள நமது ஆபீசுக்குத் திரண்டுவருகிறார்கள். நமது பிரசாரம் அவர்களது கண்களைத் திறந்திருக்கிறது. வாதம்' செய்தபின் திருப்தியுடன் போகிறார்கள்.

### முதலில் தலைவர்கள் விடுதலை

முஸ்லீம்களில் பலர் ஒற்றுமைக்கு நாங்கள் தயார்தான். ஆனால் காங்கிரஸ் எங்கள் உரிமைகளை அங்கீகரிக்க வில்லையே என்று கேட்டார்கள். இவர்களில் பெரும்பாலோர் மத்தியதரவர்க்கத்தார்கள். காங்கிரஸ்தலைவர்களின்விடுதலைக்காக எல்லோரும் ஒன்று சேராவிட்டால் உரிமையேது சுதந்திரமேது. தலைவர்கள் விடுதலை பெற்றால்தான் தேசிய பாதுகாப்பும் தேசிய சர்க்காரும் ஏற்படுத்த முடியும், இல்லையேல் ஜாப் ஆக்கிரமிப்புத்தான் என்று விளக்கப்பட்டது.

ஏழை முஸ்லிம் விவசாயிகள் நம்மைப் போற்றுகிறார்கள். போலீஸ் அடக்குமுறைக்குப் பயந்து அவர்கள் கையெழுத்துப் போடவில்லை. ஆனால் கட்சி நிதிக்குக் காசு கொடுத்தார்கள்.

கிஸான்களின் கோட்டையான பீஹாரில் நமது கட்சியின் கொள்கைதான் தேசபக்தி வாய்ந்தது என்பது மக்களுக்குத் தெளிவாகி விட்டது. பார்வர்ட் பிளாக்கர்களின் பித்தலாட்டப் பிரசாரமும், 'புரட்சி சுலோகங்களின்' திரைமறைவிலே ஜனங்களை பயமுறுத்துவதும் பிகார் வாசிகளைக் குழப்ப முடியவில்லை. தேசபக்தர்கள், காங்கிரஸ் வாதிகள் பலர் உண்மையில் நமது வழியே சரியான வழி என்பதை உணர்ந்து வருகின்றனர்.

## கட்சியின் வழிக்கு மக்களின் ஆதரவு

தமிழ்நாடு

### முஸ்லீம்கள் வரவேற்கிறார்கள்

காட்பாடி ஒரு சிறிய கிராமம். வட ஆற்காடு ஜில்லாவைச் சேர்ந்தது. அங்கே நமது கட்சி அங்கத்தினர்கள் நால்வர். நான்கு பேரும் தனி நபர் சத்தியாக் கிரகத்தின்போதுசிறைக்கு வந்து அங்கு நமதுகட்சியின் திட்டத்தை உணர்ந்து நமது கட்சியில் வந்தவர்கள். ஜில்லாக் கமிட்டி அவர்களது பங்கு (2 லட்ச நிதிக்கு) ரூ. 5 ஆக முடிவாக்கியிருந்தது, ஆனால் 3-12-42க்குள்ளேயே ரூ. 12 வசூலித்துவிட்டனர். அங்கு வட ஆற்காடு ஜில்லா காரியதரிசி போயிருந்தார். அப்போது முஸ்லீம் அன்பர் ஒருவர் தோழர் ஜோஷியின் "நாசவேலையைத் தடுப்போம்......" என்ற கட்டுரையைப் படித்துவிட்டு அதைத் துண்டுப் பிரசுரமாக வெளியிட வேண்டுமென்று வேண்டினார். தானே அதற்குப் பணம் தருவதாகும் கூறினார். நமது வழிதான் சரியானவழி என்பதை இங்குள்ள ஜனங்கள் பெருவாரியாக ஒப்புக்கொள்கிறார்கள். முஸ்லீம் நண்பரின் ஆர்வமும் ஆதரவும் நமது தோழர்களுக்கு மிகுந்த உற்சாகத்தை யளித்திருக்கிறது.

ஒட்டன் சத்திரத்தில் ஒற்றுமை வாரத்தின்போது மகஜர்களில் கையெழுத்து வாங்கி வந்தார்கள். அப்போது விவசாயி ஒருவர் கட்சிக்கு ஆடு ஒன்று கொடுப்பதாக வாக்களித்தார். சத்தியாக்கிரகம் செய்து இருமுறை சிறைசென்ற ஒருவர் பந்து விளையாட்டில் கிடைத்த மெடலைக் கட்சிக்குத் தருவதாகக் கூறினார். முஸ்லீம் லீகைச் சேர்ந்த தோழர் முகமது அனிபா நமது முறையை ஒப்புக்கொண்டு நம்மோடு கூடக் கலந்துகொண்டு கையெழுத்துக்கள் வாங்க முன்வந்தார்.

கடலூரில் கட்சி நிதிக்காக பூப்பந்தாடும் பேட்களும், ரோல்ட் கோல்ட் பின்களும், பவுண்டன் பேனக்களும் கொடுக்கப்பட்டன.

திருவண்ணமலையில் ஒரு சத்தியாக்கிரகி நமது கட்சி நிதிக்காக ஒரு ராட்டையைக் கொடுத்தார். மாணவர் ஒருவர் வெள்ளி மெடல் ஒன்று கொடுத்தார்.

### வேலை செய்யும் கட்சி

திருச்சியில் ஒற்றுமை இயக்க வாரத்தின்போது ஒரு காங்கிரஸ் வாதியைக் கண்டோம். அவருடன் பேசத் தொடங்கினேம். அவர் சொன்னர் "உங்களுடன் விவாதிக்கவும் முடியாது, உங்கள் பத்திரிகையைப் படிக்கவும் முடியாது என்று. ஏன் என்று கேட்டபொழுது, உங்களிடம் பேசினலும், உங்கள் பத்திரிகையைப் படித்தாலும் உங்கள் வழிக்கு மாற்றி விடுவீர்கள் பிறகு உங்களுடன் வேலை செய்யும்படி சொல்லுவீர்கள்" என்று தெரிவித்தார்.

பொள்ளாச்சியிலிருந்து தோழர் சின்னசாமி தனது திருமண விழாவின்போது கட்சிக்கு ரூ. 5 நன்கொடை அளித்திருக்கிறார். நாட்டையும் வீட்டையும் தாய்மார்கள் சகோதரிகள் மானத்தையும் பாஸிஸ வெறியரிடமிருந்து பாதுகாக்கும் திட்டம் கம்யூனிஸ்டுகளின் திட்டம் தான் என்று அவர் எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

### ஆக்கிரமிப்பின் வாயிலிலே

ஜப்பானிய பாசிஸம் அஸாம் எல்லையிலே கதவைத் தட்டிக் கொண்டிருக்கிறது. இந்திய விடுதலையின் காவல் கூடம் இன்று அஸாம்தான். அங்கே நமது கட்சியின் ஒற்றுமை இயக்கச் சங்கநாதம் மூழங்கியது. தேசபக்தர்கள் திரண்டு வந்தார்கள். பாசிஸ்டுகளின் ஆக்கிரமிப்பை முறியடிக்கவும் தேசத் தலைவர்களின் விடுதலையைப் பெறவும் தேச சுதந்திரம் அடையவும் துள்ளி எழுந்துவிட்டார்கள். நம்முடைய பாதுகாப்பை அசைக்க முடியாத ரீதியில் சமைக்க வேண்டுமென்று முன் வந்திருக்கிறார்கள்.

#### ஓரே வழி

சூர்மா பிரதேசத்தில் ஒற்றுமை வார இயக்கம் வெகு தீவிரமாக நடைபெற்றது.

(7-ம் பக்கம் பார்க்க)

## விடுதலைப்போர்

*"சமரமாய் சகாக்களே" என்ற மெட்டு*

போர்க்களத்தை நோக்கியே புறப்படுங்கள் தோழர்காள்
போர்முரசடித்து வெற்றி வீர கோஷமிட்டு ஜல்தி (போர்)

மக்கள் யுத்தமே யிது மிக்க வெற்றிபெற்றிது
மக்களின் சுதந்திரத்துவ முக்கியமே தழைத்திட (போர்)

படைதிரண்டு வாருங்கள் உடன்சமர் தொடருங்கள்
பாசிச மிலேச்ச வெற்றி பாழ்படப் பொருதுங்கள் (போர்)

நசுக்குதல் நசுக்குங்கள் அடக்குதல் ஒடுக்குங்கள்
பாசிசத்தினோடு ஜப்பான் ராணுவத்துவம் வீழ்த்துங்கள் (போர்)

கொக்கரிக்கும் மண்வெறி கொடூரமான புன்னெறி
அக்கிரம பிற்போக்கு ஜெர்மன் ஹிட்லரியம் சாய்த்திட (போர்)

ஆசிய ஜப்பானியர் ஆணவ ஜெர்மானியர்
பாசிஸத்தில் மஞ்சள் வெள்ளை பேதமொன்றுமில்லைகாண் (போர்)

அடிமையான மக்களே அணிவகுத்து நில்லுங்கள்
படிமிசைப் புதியவாழ்வில் பங்குகொள்ள முந்துங்கள் (போர்)

குண்டுமாரி பொழியினும் கொடுங்காண் பேய்கள் சீறினும்
எண்டிசையும் நின்றெதிர்ப்பு எழுந்தெழுந்து தாக்கினும் (போர்)

சண்டையில் தளர்ந்திடோம் சாவதற்கும் அஞ்சிடோம்
என்று வீறுகொண்டு சண்டவேகமாய்ப் போராடிட (போர்)

இறுதியான யுத்தமாம் எழுக எழுக அனைவரும்
உறுதிகொண்டு புதிய லோகம் உதையமாகும் நிச்சயம் (போர்)

—ப. ஜீவானந்தன்

## திருப்பூர் தோட்டித் தொழிலாளர் வெற்றி

எண்ணெய் தேய்த்துக் குளிப்பதும் சமபந்தி போஜனமும் பெரிய சீர்திருத்தங்களாகக் கருதப்பட்ட நாட்களில் ஆரம்பமாயிற்று திருப்பூர் முனிசிப்பல் தோட்டித் தொழிலாளர் சங்கம். யுத்தம் ஆரம்பித்தபின் நமது கட்சித் தோழர்களின் சிரத்தை இந்தத் தொழிலாளர்கள் விஷயத்தில் பதிந்தது. கடன் சுமையும் லஞ்சப் பேயும் தொழிலாளர்களைச் செல்லரித்து வந்தன. ஓட்டைக் குடிசையிலே ஒன்பது பேர் குடியிருக்கும் கோரம் காணச் சகியாது. வாங்கும் கூலியோ வயிற்றைக் கழுவவும் போதாது. 1941 மார்ச்சு மாதம் பொறுக்க முடியாத நிலையில் பொட்டி வெடித்தது வேலை நிறுத்தம். பொது மக்களின் அமோக ஆதரவால் ரூ. 1 சம்பள உயர்வு கிடைத்தது. ஆனால் மற்ற கோரிக்கைகள் கவனிக்கப்படவில்லை.

விலை வாசிகளோ யாரையும் கேட்காமலே ஏறி வந்தன. எத்தனை பெட்டிஷன்கள் போட்டாலும் என்னதான் கேட்டாலும் முனிசிபாலிடி அசைந்து கொடுக்கவில்லை. சமரச ஆபீசரும் முனிசிபல் அதிகாரிகளும் வீண் மிரட்டல்களிலேயே காலங்கடத்தினார்கள். பொறுமை எல்லை மீறிவிடவே இவ்வருஷம் செப்டம்பர் 23ந் தேதி நோட்டீஸ் கொடுக்கப்பட்டது. கருங்காலிகளைக் கொண்டுவர அதிகாரிகள் முயன்றார்கள். எத்தனையோ சூழ்ச்சிகளைக் கையாண்டார்கள். ஆனால் தொழிலாளர்கள் கட்டுக் குலையவில்லை.

அதிகாரிகள் பிடிவாத கோபுரத்திலிருந்து இறங்கி வர நேர்ந்தது. நவம்பர் மாத முதல் ரூ. 12 அல்லது ரூ. 13 பெறுவோருக்கு ரூ. 3-8-0யும், ரூ. 8, 9, 10, 11 பெறுவோருக்கு ரூ. 4-8-0ம் யுத்த அலவன்ஸாகக் கொடுக்க முடிவு செய்தார்கள். இது போதாது. தினசரி ஏறிவரும் விலைவாசி உயர்வை இதனல் ஈடுசெய்ய முடியாது. கடன் தொல்லை ஒருபுறம் பிய்த்தெடுக்கிறது; அதிகாரிகளின் அட்டகாசம் மறுபுறம் ஆத்திரமூட்டுகிறது. தொழிலாளர்கள் கட்டுப்பாட்டுடன் இந்தச் சிறு வெற்றியில் பெற்ற படிப்பினைகளை மனதில் கொண்டு கிளர்ச்சி செய்து வருகிறார்கள். நமது கட்சியின் சேவையில் தளராத நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள்.

### சிவகாசியில் தொழிற்சங்கம்

சிவகாசித் தொழிலாளர் சங்கம் என்றிருந்த சங்கத்தை இரண்டாக வகுத்து சிவகாசி தீப் பெட்டித் தொழிலாளர் சங்கம், சிவகாசி அச்சுத் தொழிலாளர் சங்கம் என இரண்டு சங்கங்கள் நிறுவப்பட்டுள்ளன. நாடார் பிரஸ், காரனேஷன் லிதோ பிரஸ் முதலிய விடங்களில் வேலை செய்யும் தொழிலாளிகள் சங்கத்தில் ஆர்வத்துடன் சேர்ந்து வருகின்றார்கள்.

### கரூர் மோட்டார் தொழிலாளிகள்

கரூரிலுள்ள வி. எம். எஸ். கம்பெனியில் சுமார் 350 தொழிலாளிகள் வேலை செய்கிறார்கள். முதலாளிகள் தொழிலாளிகளைக் கண்டபடி நடத்துகிறார்கள். தொட்டதற்கெல்லாம் சம்பளப் பிடித்தம் சஸ்பெண்டு இன்னும் எத்தனையோ தண்டனைகள். தொல்லைகள் தீர வேண்டுமென்ற நோக்கத்தோடு மோட்டார் தொழிலாளர்களை ஒன்று சேர்த்து "டிரான்ஸ்போர்ட் வாக்கர்ஸ் யூனியன்" என்னும் பேரோடு ஒரு சங்கம் நிறுவப்பட்டது. சங்க வேலைகளில் ஊக்கம் காட்டிய தோழர்கள் ராஜா மான்சிங், தங்கமுத்து இருவரையும் முதலாளிகள் வேலையிலிருந்து நீக்கிவிட்டார்கள். இதோடு சங்கத்தை உடைக்கப் பல சூழ்ச்சிகள் செய்து வருகின்றார்கள். இப்போது தொழிலாளருக்குக் கொடுக்கப்படும் பத்தாவையும் குறைத்துவிட்டார்கள்- டிஸ்மிஸ் ஆன தொழிலாளர்களைப் பற்றி அதிகாரிகளுக்குத் தெரிவித்தும் ஒன்றும் நடந்தபாடில்லை. தொழிலாளர்கள் சங்கமூலம் ஒன்று சேர்ந்து பலப்பட்டால்தான் வழிபிறக்குப் என்ற திடமான நம்பிக்கையுடன் சங்கத்திலே சேர்ந்து வருகிறார்கள்.

### கோலார் தொழிலாளர் தலைவர்களை விடுதலை செய்க

கோலார் தங்கவயல் தொழிலாளர்கள் விஷயத்தில் சிரத்தை காட்டி வந்த தோழர்கள் பலர் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள், பாதுகாப்பில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். பலர் வெளியேற்றப்பட்டிருக்கிறார்கள். இதனல் ஏற்பட்டுள்ள நெருக்கடியான நிலைமையைப்பற்றி இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பங்களூர் நகர கமிட்டி 30-11-42-ந் தேதி ஒரு அறிக்கை விடுத்திருக்கிறது. தொழிற் சங்கத்தில் தேர்தல் காலம் அணுகிவிட்டதாலும், இப்பொழுதுள்ள சங்க நிர்வாகம் தொழிலாளிகளின் பரிபூர்ண ஆதரவை பெற்றதாக இல்லாமலிருப்பதாலும், தொழிலாளர்களின் நம்பிக்கையைப் பெற்ற கம்யூனிஸ்டுகளான தோழர்கள் லக்ஷ்மண முதலியார், ஷண்முகம், வஜ்ரவேலு செட்டி முதலியவர்களை அரசாங்கம் கைது செய்தது தவறு என்றும், அவர்களை உடனே விடுதலை செய்வது அவசியமென்றும் அறிக்கையில் வற்புறுத்தப்பட்டிருக்கிறது.

தொழிலாளர் இயக்கம்

# சங்கத்தைக் காப்போம் சாவதற்கும் அஞ்சிடோம்

## ராஜேந்திர மில்லில் வேலை நிறுத்த நோட்டீஸ்

மாரப்ப கவுண்டர் ஒரு தொழிலாளி. சேலம் தொழிலாளர் சங்கத்தின் தலைவர். சென்ற ஆகஸ்ட் மாதத்தில் வேலைநிறுத்த நோட்டீஸ் சங்கம் கொடுத்திருந்த காலத்தில் திடீரென்று வேலையிலிருந்து ஸஸ்பெண்ட் செய்யப்பட்டவர். இன்னும் வேலையில்லாமல் தானிருக்கிறார். சங்கத் தலைவராயிருந்து தொழிலாளிகளை ஒன்றுபடுத்த முன்வந்ததுதான் அவரது குற்றம்.

தொழிலாளி ஒருவர் சங்கத் தலைவராயிருப்பது மில் முதலாளிக்குப்பிடிக்கவில்லை. விசாரணைக் கோர்ட்டொன்று ஆகஸ்ட் மாதத்தில் நடந்தபொழுது தொழிலாளி, சங்கத் தலைவர் பதவிக்கு லாயக்கானவரா என்ற பிரச்னையைக் கிளப்பினர். அவரது வாதம் ஒப்புக் கொள்ளப்படவில்லை. ஆனால் வேலைக்கு மீண்டும் எடுப்பது நம் கையில் தானே இருக்கிறது என்ற மனப்பான்மையுடன் மாரப்ப கவுண்டருக்கு இன்னும் முதலாளி வேலை கொடுக்கவில்லை.

மாணிக்கம் என்னும் தொழிலாளி சங்கத்தின் காரியதரிசி, சிறு வயது. ஆனால் பம்பரம் மாதிரிச்சுற்றிக்கொண்டு உழைப்பார். சங்க நிர்வாகப் பொறுப்பிலும், கூட்டங்கள் நடத்தி வைப்பதிலும், தொழிலாளிகளைத் திரட்டி ஒன்றுபடுத்துவதிலும் ஓயாமல் தொண்டாற்றுகிறவர். சங்கம் என்றால் அவருக்கு உயிர்தான். இத்தகைய தொழிலாளியை முதலாளிகள் சும்மா விட்டு வைப்பார்களா? தோழர் மாணிக்கமும் சென்ற மாதம் காரணமின்றி வேலையிலிருந்து நீக்கப்பட்டுள்ளார்.

சங்கத்திற்காகப் பாடுபட்டு வரும் ஒவ்வொரு தொழிலாளியும் இவ்வாறே முதலாளிகளால் பழி வாங்கப்பட்டு வருகின்றனர். மாரப்ப கவுண்டரைப் பற்றியும் நீக்கப்பட்ட இதர தோழர்களைப் பற்றியும் சங்கம் எவ்வளவோ கடிதங்கள் மில் நிர்வாகத்திற்கு எழுதியும் பதில் கிடையாது. சர்க்காருக்குத் தெரியப்படுத்தியும் மில் முதலாளியின் பிற்போக்கைக் கண்டித்து யாதொரு நடவடிக்கைகளும் எடுக்கப்படவில்லை. தொழிலாளிகளின் குறைகள் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வந்துள்ளன. எவ்வளவு முறையிட்டாலும் பயனில்லை. இதற்கு மாறாக சங்கத்தை உடைப்பதெனக் கங்கணம் கட்டிக்கொண்டே மில் முதலாளி பழிவாங்கும் திடீர் டிஸ்மிஸ் வேலைகளைக் கையாளுகின்றார்.

முதலாளியின் போக்கு வேலை நிறுத்த நிர்ப்பந்தத்தையே தொழிலாளர் சங்கத்தின் தலைமீது சுமத்தியுள்ளது. தொழிலாளிகளின் பொறுமைக்கும், அவர்களை அவமதிப்பதற்கும் கூட ஒருஎல்லை உண்டு அல்லவா! ஆகவே 28-11-42ல் வேலை நிறுத்த நோட்டீஸ் சங்கம் ராஜேந்திரா மில் நிர்வாகத்திற்கு அனுப்பியிருக்கிறது. தொழிலாளர்களின் கோரிக்கைகளாவன:—

1. இதுவரையில் தகுந்த காரணமில்லாமல் வேலையிலிருந்து நீக்கப்பட்ட தொழிலாளர்களை எல்லாம் மறுபடியும் வேலைக்கு எடுத்துக்கொள்ள வேண்டும். வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுத்தபின் ஸஸ்பெண்ட், செய்யப்பட்ட சங்கத் தலைவர் மாரப்ப கவுண்டரை வேலைக்கு எடுத்துக் கொள்ளவேண்டும்.

2. "சேலம் மில்தொழிலாளர் சங்கம்" முதலாளிகளால் அங்கீகரிக்கப்படவேண்டும்.

3. எல்லாத் தொழிலாளிகளுக்கும் கோயம்புத்தூர் விகிதப்படி சம்பளம் கொடுக்கப்படவேண்டும்.

4. கோயம்புத்தூரில் கொடுக்கப்படுவது போலவே இந்த வருஷத்தில் இன்னுமொரு மாதச் சம்பளம் போனஸாகவும் அடுத்த வருஷத்தில் இரண்டு மாதச் சம்பளம் போனஸாகவும் கொடுக்கப்படவெண்டும்.

5. மில்லுக்குள் உள்ள ஸ்டோரை நடத்தும் பொறுப்பு 'ஷேர் வாங்கியவர்களின் பிரதி நிதிகள் கையில் விடப்படவேண்டும். சாமான்களின் விலைகளைச் சங்கத்தைக் கலந்தாலோசித்தபின் நிர்ணயிக்க வேண்டும்.

அன்னிய ஆக்கிரமிப்பு பயம் தலைகாட்டியுள்ள இன்று உற்பத்தியில் தவக்கமேற்படக்கூடாதென்பதை மற்ற எல்லோரையும்விடத் தொழிலாளர்கள் உணர்ந்து நடக்கிறார்கள். ஆனால் லாபக்கொள்ளை மீது மட்டும் கண்ணுயிருக்கும் முதலாளிகள், கோரிக்கைகளைக் கொடுக்க மறுக்கிறார்கள், வேலை நிறுத்தத்திற்கு நிர்ப்பந்திக்கிறார்கள்.

உற்பத்தியிலே தொழிலாளர்களின் பரிபூரண ஒத்துழைப்பைப் பெறவேண்டிய இந்த கட்டத்தில் அடிப்படையான தொழிற் சங்க உரிமைகளுக்கே உலைவைக்கிறார்கள். வேறு வழியில்லாமல் நிர்ப்பந்தத்தால் கடைசியாக வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்போதாவது சர்க்கார் உடனே தலையிட்டுத் தொழிலாளர்களின் நியாயமான குறைகளைத் தீர்க்க முன்வருமா? தொழிலாளர்கள் தங்களது நியாயமான கோரிக்கைகளின் பின்னே மகத்தான பொதுஜன ஆதரவைத் திரட்டவேண்டும். தேசப் பாதுகாப்புக்கு உற்பத்தி உயிர்நாடியென்பதை உணர்த்தவேண்டும். முதலாளிகளின் முரட்டுப் பிடிவாதத்தை முறியடிக்க வேண்டும்.

### எடப்பாடி யூனியன்போர்ட் தோட்டித் தொழிலாளிகள்

எடப்பாடி யூனியன்போர்டின் கீழ் 19 தோட்டித் தொழிலாளிகள் வேலை செய்கின்றார்கள். எடப்பாடியைச் சுற்றி 4 மைல் விஸ்தீரணத்திற்கு அவர்கள்தான் வேலைசெய்யவேண்டும். வாரத்துக்கு அரை நாள் லீவு. மாதம் ஆண் பெண் இரு தொழிலாளருக்கும் ரூ. 8-8-0 தான் சம்பளம். சென்ற 10 மாதங்களாக ரூ. 1 பஞ்சப்படி. பிரசவகால லீவு கிடையாது.

போர்டுக்குப் போட்ட மனுக்கள் கணக்கில்லை. ஆனால் பலன் ஒன்று மில்லை. போர்ட் கலைக்கப்பட்டு இப்போது ஸ்பெஷல் ஆபீசர் நியமிக்கப்பட்டிருக்கிறார். இந்தப் பத்தொன்பது பேரையும் ஒன்று திரட்டி நமது கம்யூனிஸ்டுத் தோழர்கள் முயற்சியால் 16–11–42 ல் ஒரு சங்கம் ஸ்தாபிக்கப்பட்டது. 18-ந் தேதி எல்லோருமாகப்போய் ஸ்பெஷல் ஆபீசரைக் கண்டு கோரிக்கைகளை முன்வைத்தனர். இதன் பலனாக பஞ்சப்படி ரூ. 4 கிடைத்தது. 26–11–42 ல் நமது தமிழ்மாகாணக் கமிட்டியின்காரியதரிசி தோழர்மோஹன் எடப்பாடிக்குவந்த சமயம் இந்தத் தொழிலாளிகள் ஒவ்வொருவரும் தலைக்கு 0-2-0 அணா வீதம் நமது கட்சி நிதிக்குச் செலுத்தினர்.

### சுண்ணாம்புக்கரடு (மேக்கினிஸைட்) தொழிலாளர் துயரம்

சேலத்திலிருந்து சுமார் 5 மைல் தூரத்திலுள்ள சுண்ணாம்புக் கரடு தான் இந்த சிண்டி கேட்டுக்கு சொந்தமானது. அதிலே கிட்டத்தட்ட 4000 ஆண் பெண் தொழிலாளிகள் வேலை செய்கிறார்கள். காலை முதல் மாலை இருட்டும் வரையிலே சுண்ணாம்புச் சுரங்கத்தில் மண்டை வெடிக்கும் வெய்யிலிலே அவர்கள் பாடுபடுகிறார்கள். கொடுக்கப்படும் கூலியோ படுமோசம். பெண்களுக்கு 2½ அணா முதல் 3½ அணா, ஆண்களுக்கு 4 அணா முதல் 7அணா வரை. அங்குள்ள அதிகாரிகள் செய்யும் அட்டகாசமோ சகிக்கமுடியாது. கரடிலே ஆஸ்பத்திரி ஒன்றிருக்கிறது. அதிலே மருந்து வாங்கினாலும் வாங்கா விட்டாலும் தொழிலாளி ஒவ்வொருவரும் மாதம் 2 அணா கொடுக்க வேண்டும். யுத்த அலவன்ஸோ 4 அணா தான். மாதம் நாலு ரூபாய்க்குமேல் கூலி பெறுவோருக்கு ரூ.2ம் அதற்குக்கீழ் கூலிவாங்குவோருக்கு ரூ. 1ம் போனசாகக் கொடுக்கிறார்கள். ஆனால் முதலாளிகளோ கொள்ளை லாபமடிக்கிறார்கள்.

ஆகவே நமது கம்யூனிஸ்டுத்தோழர்கள் அங்கே போய் தொழிலாளர்களின் நிலைமையை உணர்ந்தார்கள், கூட்டங்கள் கூட்டிக் குறைகளை விளக்கினார்கள். சங்கமூலம் ஒன்றுதிரட்ட முனைந்தார்கள். முதல் நாள் கூட்டத்திலேயே மானேஜர் துரைக்குக் கோபம் வந்துவிட்டது. மறுநாளே" சங்கம் கிங்கம் எல்லாம் எதுக்கு, என்னிடம் சொன்னால் எல்லாம்சரியாக்கி விடுகிறேன்" என்று பாய்ந்தார் அவர்.

தொழிலாளிகள் நூற்றுக்கு 75 பஞ்சப்படி வேண்டு மென்றும், தினசரிக் கூலியில் 3 அணா உயர்வு, ஒருமாதச் சம்பளம் போனஸ், ஒருவருஷ சர்வீசுள்ளவர்களுக்கு லீவு வசதி, ஆஸ்பத்திரிக்காக 2 அணா பிடிப்பதை நிறுத்தல், போன்ற கோரிக்கைகளை மானேஜரிடம் சமர்ப்பித்தார்கள். 24–11–42ல் அவர்களது சங்கமும் நிறுவப்பட்டது. ஒன்றுபட்டால் தான் இந்தக் கோரிக்கைகளைப் பெறமுடியும் என்பதை உணர்ந்து அவர்கள் சங்கத்திலே கூடி வருகின்றார்கள்.

# சங்க வழியே நமது வழி

## சென்னை மாகாண தொழிற்சங்க காங்கிரஸ்

அகில இந்தியத்தொழிற்சங்க காங்கிரஸ் தொழிலாளிகளுக்கு வெகு முக்கியமான ஸ்தாபனம்; ஸ்தாபன ரீதியான பலத்தை அளிக்கும் மத்திய ஸ்தாபனம். மாகாணத் தொழிற் சங்கக் காங்கிரஸுகளின் மூலம் தொழிற் சங்கங்கள் மாகாணரீதியாகத் திரட்டப்பட்டு மத்திய ஸ்தாபனத்துடன் இணைக்கப்படுகின்றன. சென்ற ஒரு வருஷ காலமாக சென்னை மாகாணத் தொழிற் சங்கக் காங்கிரஸ் தொழிற் சங்க இயக்கத்திலும் பிரச்னைகளிலும் சிரத்தை காட்டாமல், நமது மாகாணத்தின் தொழிற் சங்கங்களுக்கு ஸ்தாபனரீதியான பலமும் தொடர்பும் ஏற்படுத்தாமல் உயிரற்றிருந்தது என்று கூறலாம். இந்த நிலைமையைப் போக்குவதற்கான முயற்சிகள் சமீபத்தில் எடுத்துக்கொள்ளப்பட்டு மாகாணத் தொழிற் சங்க காங்கிரஸ் மீண்டும் வேலை செய்யத் தொடங்கியுள்ளது.

22–11–42-ல் அகில இந்திய தொழிற் சங்க காங்கிரஸின் உபகாரியதரிசி தோழர் கெட்கிகர் சென்னைக்கு வந்திருந்தபொழுது மாகாணத் தொழிற்சங்க நிர்வாகக் கமிட்டிகலைக்கப்பட்டு ஒரு புதியதற்காலீக கமிட்டியாக கீழ்க்கண்டவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

ஸ்ரீ வி. சக்கரை செட்டி, தலைவர்.<br>
,, பி. ஆர். கே. சர்மா<br>
,, எஸ். பக்கிரிசாமி — உபதலைவர்கள்<br>
,, டி. வி. ஆனந்தன, பொதுக்காரியதரிசி<br>
,, டி. ஆர். கணேசன்,<br>
,, கோவிந்தசாமி — உபகாரிய தரிசிகள்<br>
,, கே. வெங்கிடசாமி நாயுடு — பொக்கிஷதார்.

இந்தத் தாற்காலீகக் கமிட்டி உடனடியாக மாகாணத்திலுள்ள தொழிற் சங்கங்களை இணைக்கும் பணியிலீடுபட வேண்டிய தென்றும் 2 மாதத்திற்குள் கூட்டப்படும் மாகாணத்தொழிற் சங்க கன்வென்ஷனில் அடுத்தவருட நிர்வாகிகளைத் தேர்ந்தெடுப்பதெனவும் தீர்மானிக்கப்பட்டது. 25-11-42ல் மேற்கூறிய கமிட்டிக் கூட்டத்தில் தோழர் பி. ராமமூர்த்தியின் ஆலோசனைப்படி தொழிலாளர்களின் உடனடியான கோரிக்கைகளான பஞ்சப்படி, கூலி உயர்வு முதலியவற்றைப் பற்றிய தீர்மானம் முக்கூட்டு தொழில் மகா நாட்டின் (சர்க்கார், முதலாளிகள், தொழிலாளிகள் பிரதிநிதிகள் கொண்டது) நிரந்தர லேபர் கமிட்டிக்கு அனுப்பப்பட்டது.

தொழிற் சங்கங்கள் தொழிலாளிகளின் பலத்தையும் ஸ்தாபன ஒழுங்கையும் பெருக்கும் ஸ்தாபனங்கள். அது மட்டும் போதாது. நமது மாகாணத்திலுள்ள ஒவ்வொரு தொழிற் சங்கமும் மாகாணத் தொழிற் சங்க காங்கிரஸில் சேர்ந்தாக வேண்டும். நமது தோழர்கள் இதில் கவனம் செலுத்துவார்களாக.

### நாகை ஸ்டீல் ரோலிங் மில்ஸ் தொழிலாளர் எழுச்சி

நாகப்பட்டணம் ஸ்டீல் ரோலிங் மில்லிலே சுமார் 600 தொழிலாளிகள் வேலை செய்து வருகின்றார்கள். இரும்பு வந்தவுடன் இரவு பகல் வேலை; பின்னால் கதவடைப்பு என்ற ரீதியில் முதலாளிகள் ஏழைத் தொழிலாளிகளை வாட்டி வருகின்றார்கள். தொழிலாளிகள் கேட்கும்கோரிக்கைகளை எல்லாம் கண்டிராக்டு நிபந்தனை என்ற பேரைச் சொல்லித் தள்ளிவருகின்றார்கள். சங்கம் புதுப்பிக்கப்பட்டுத் தொழிலாளிகள் தினசரி அதிகம் அதிகமாகச் சேர்ந்து வருகிறார்கள். ஸ்டாக்கில்லை அதனால் வேலையில்லை என்று தொழிலாளரை விரட்டும் வழக்கம் தீர்ந்தபாடில்லை.

சென்ற மாதம் 9ந் தேதி தொழிலாளிகள் வேலையில்லை என்று கூறப்பட்டனர் உடனே தொழிலாளிகள் ஊர்வலமாகப் போய் மானேஜரைக் கண்டார்கள். "வேலை யில்லாத நாட்களுக்கு அரைச்சம்பளம் அல்லது அட்வான்ஸ்; ஸ்டாக்குக்குத் தகுந்த முறையில் எல்லா தினங்களிலும் பிரித்து வேலைசெய்ய வேண்டும். அரிசிடிபோக்கள் திறக்கப்பட வேண்டும்" என்று கோரிக்கை செய்தார்கள். மானேஜர் மூன்றுநாள் வேலையும் அரிசிக்காக ரூ. 1ம்தருவதாயும்கூறினர். அன்றுஒத்துழைக்காத தொழிலாளர்களுக்கு மறுநாள் அரிசிக்கு அட்வான்ஸ் கிடைக்கவில்லை. இந்தப் படிப்பினை தொழிலாளிகளிடையே புதியஉணர்ச்சியையும் விழிப்பையும்அளித்திருக்கிறது. சங்கவழியேநமதுவழிஎன்று நாகைத் தொழிலாளிகள் அறிந்தனர்.

---

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

பந்த சமரசத்தை ஏற்படுத்த வருவதால் நேரும் ஆபத்தை அவர்களது சொந்தஅனுபவத்திலிருந்தே உணர்ந்தார்கள்.

இந்தத்தகராறில் இருகட்சிகளும் லேபர் கமிஷனருடைய சமரசத்தை ஏற்றுக் கொள்ள ஒப்புக்கொண்டார்கள். ஆனால் தொழிலாளிகள் அவரது முடிவின்படி நடந்துகொண்டார்கள். ஆனால் முதலாளிகளோ, முடிவுகளைக் காற்றிலே விட்டுவிட்டார்கள். லேபர் கமிஷனிரின் சிபாரிசுகளிலே எந்த ஷரத்தைப்பற்றியாவது வியாக்கியானம் செய்வதில் அபிப்பிராய பேதம் ஏற்படுமானல் அதையும் முடிவு செய்வது லேபர் கமிஷனரே என்று ஒப்பந்தத்தில் குறிப்பிடப் பட்டிருக்கிறது. ஆனால் அந்த ஷரத்தையும் மீறி நடந்தார்கள் முதலாளிகள்.

கடைசியில் ஹைகோர்ட் ஜட்ஜ் ஒருவரின் மத்தியஸ்தத்திற்குத் தொழிலாளர்கள் இணங்க வேண்டி வந்தது. அவரோ லேபர் கமிஷனரின் சிபார்சுகளை நிராகரித்துத் தீர்ப்புக் கூறிவிட்டார். இந்தப் படிப்பினைகளைக் கண்ணாரக் கண்ட தொழிலாளி ஒருவன் கூட இந்த ஷரத்தை ஏற்றுக்கொள்ள மாட்டான்.

இந்த ஷரத்துக்கு ஆதரவாக அரசாங்கம் கூறும் வாதங்களைக் கேட்டு யாரும் திருப்தியடைய முடியாது. "மத்தியஸ்தத்திற்கு இருகட்சிகளும்' ஒப்புக்கொண்டால் கூட மத்தியஸ்தக் கோர்ட்டின் முடிவை நிறைவேற்றுவதற்கு சிவில் கோர்ட்டிற்குப் போக வேண்டி வருகிறது" என்று இந்த மசோதாவின் நோக்கங்களையும் காரணங்களையும் கூறும் அறிக்கை கூறுகிறது.

### வழி என்ன ?

ஆனால் இந்த நிலைமையைச் சீர்திருத்துவது எப்படி? இரு கட்சிகளும் ஒப்புக்கொண்டு நடைபெறும் மத்தியஸ்தத்தில் ஏற்படும் முடிவை சுலபமாக நிறைவேற்றுவதற்குவேண்டிய அதிகாரத்தை அளிக்கும் சாதாரண ஷரத்து ஒன்றுதான் இதற்குப் பரிகாரம். இதற்கு பதிலாக அரசாங்கம் தொழிலாளர்களை அவர்களது விருப்பத்துக்கு விரோதமாக நிர்ப்பந்தமான மத்தியஸ்தத்திற்கு உடன்படுமாறு கட்டுப்படுத்துகிறது.

ஆகவே சர்க்கார் உடனடியாக குறைந்தபட்சச்சம்பளம், பிராவிடண்ட் பண்ட், நோய் கால உதவி, லீவு வசதி, வயதான காலத்தில் உதவி; போதுமான பஞ்சப்படி இவைகளைத் தொழிலாளர்கள் பெறுவதற்கான சட்டங்களைநிறைவேற்ற வேண்டும். இதோடுகூட உற்பத்திக் கமிட்டிகள் சட்ட ரீதியாக நிறுவப்படவேண்டும்.

### திருத்தங்கள் வேண்டும்

இந்த மசோதா விரிவானதல்ல. ஆயினும் இதிலும் பின்வரும் திருத்தங்கள் செய்யப்பட வேண்டும்:—

1. குறைந்த பட்சம் நூற்றுக்கு பதினைந்து பேர் அங்கத்தினர்களாகவுள்ள தொழிற்சங்கங்களைக் கட்டாயம் அங்கீகாரம் செய்ய வேண்டும்.

2. பாக்டரிகளுக்குள் நிரந்தரச் சட்ட திட்டங்களை நிர்ணயிக்கும் விஷயத்தில் தொழிற்சாலை சம்பந்தப்பட்ட எல்லாக் கட்சிகளையும் (தொழிற்சங்க முட்பட)கலந்தாலோசிக்க வேண்டும்.

3. சமரசப் பேச்சுக்களில் தொழிலாளர் சார்பாக வாதிப்பதற்கு மொத்த தொழிலாளர்களின் குறைந்தபட்சம் நூற்றுக்குப் பதினைந்து பிரதிநிதித்துவம்இருந்தால் போதும்.

4. சமரச நடவடிக்கைகளுக்குப்பதினைந்து நாள் காலவரையறையாக நிர்ணயிக்கவேண்டும். தொழில் தகராறு பதிவு செய்யப்பட்ட நாளிலிருந்து இதைக் கணக்கிடலாம்.

5. இந்த மசோதாவில் நிர்ப்பந்த மத்தியஸ்தத்தைப்பற்றிக் கூறும் ஷரத்துக்கள் அத்தனையும் நீக்கப்படவேண்டும். அதற்குப்பதிலாக.

6. இரண்டு கட்சிகளும் ஒப்புக் கொண்ட மத்தியஸ்தக் கோர்ட்டு செய்யும் முடிவுகளை சிவில் கோர்ட்டுக்குப் போகாமலே சட்டமூலம் சர்க்காரே நடைமுறையில் கொண்டுவரும் வகையில் சிறியதோர் சட்டமியற்ற வேண்டும்.

இந்த மசோதா தொழிலாளரின் கையிலுள்ள ஒரே ஒரு ஆயுதத்தைத் தாக்குகிறது. இந்த அநீதியான சட்டத்தை எதிர்த்துத் தமிழ்நாட்டிலுள்ள தொழிற் சங்கங்கள் தொழிலாளர்களைத் திரட்ட வேண்டும், கூட்டங்கள் கூட்டவேண்டும் ஆர்ப்பாட்டங்கள் நடத்தவேண்டும் என்று இந்தியக்கம்யூனிஸ்டுக் கட்சியின் தமிழ்மாகாணக் கமிட்டி வேண்டுகிறது. கூட்டங்கள் போட முடியாத இடங்களில் சர்க்காருக்கு மகஜர்கள் அனுப்பப்பட வேண்டும்.

யுத்த விமர்சனம்

# சோவியத்தின் தலைமையில் சுதந்திரப் போர்

செஞ்சேனையின் தாக்குதல்கள் இன்று உலகத்தையே பிரமிக்கச் செய்துவிட்டன. $1\frac{1}{2}$ வருட காலமாக பலத்த நாஜிப்படையெடுப்பைச் சமாளித்து, எவ்வளவோ பிரதேசங்களை இழந்தும் மனச்சோர்வு குன்றாமல், இன்று ஹிட்லர் சைன்யங்களை விரட்டியடிக்கும் தாக்குதலை நிகழ்த்தும் சக்தி ஸோவியத் மக்களுக்குத்தான் இருக்கமுடியும். சோவியத் சமூக அமைப்பும், சோவியத் பொருளாதார அமைப்பும், சோவியத் மக்களின் ஐக்கியமுமே இதற்குக் காரணம்.

உற்பத்தியைப் பெருக்குவதாயினும் சரி உக்ரமாய்ப் போராடுவதாயினும் சரி, திட்டப்படியே முன்னேற்றம். இன்று ஆயிரம் மைல் நீளத்திற்கு மேற்பட்ட பிரதேசங்களில் முன்னேறுவது ஹிட்லர் சைன்யங்களல்ல, செஞ்சேனை. எல்லா முனைகளிலுமாகக் கணக்குப் பார்த்தால் இந்தப் பத்துநாட்களில் சுமார் ஒரு லட்சம் ஜெர்மானியருக்கு மேல் கொல்லப்பட்டிருப்பார்கள் என்று கூறுகிறது இஸ்வெஸ்டியா பத்திரிகை. வீணாகச் சாவதைத் தவிர்க்கவேண்டி 'சண்டையை நிறுத்துங்கள்' என்று ஜெர்மன் சிப்பாய்களைக் கோரும் துண்டுப் பிரசுரங்கள் விமான மூலம் பரப்பப்படுகின்றன. எங்குபார்த்தாலும் ஏராளமான தளவாடங்களும், லாரிகள், குதிரைகள், உணவு சேமிப்புகளும் நாஜிகளிடமிருந்து கைப்பற்றப்பட்டுள்ளன.

## செஞ்சேனையின் தாக்குதல்

தெற்கு அரங்கத்தில் ஸ்டாலின் கிராட் அழியாப்புகழ் பெற்றுவிட்டது. அதோடு மட்டுமல்லாமல் ஸ்டாலின்கிராடிற்கு மேற்கே நூறுமைல்வரை சோவியத் படைகள் முன்னேறி, ஸ்டாலின்கிராடை அணுகியுள்ள ஜெர்மன் சைன்யங்கள் சுற்றி வளைக்கப்பட்டுள்ளன. மார்ஷல் டிமோஷெங்கோவின் பட்டாளமொன்று ராஸ்டாவை நோக்கிச் சென்றுகொண்டிருப்பதாகவும் செய்தி வந்துள்ளது. ராஸ்டாவ் நகரம் யுத்த ஆரம்பத்திலேயே ஜெர்மானியர்கைவசமாகி மீண்டும் செஞ்சேனையால் மீட்கப்பட்டது. ஆயினும் இவ்வருஷம் ஹிட்லர் அசாத்தியப் படைபலம்கொண்டு தாக்கியபோது செஞ்சேனை மறுபடியும் ராஸ்டாவைக் கைவிட நேர்ந்தது. ராஸ்டாவ் நகரத்திற் கருகில்தான் ஜெர்மன் சைன்யங்கள் ஏராளமாகக் கொண்டுவரப்பட்டன.

மத்தியப் போர்முனையில் செஞ்சேனை லாட்வியா தேசத்து எல்லைக்கு அறுபது மைல் தூரம் வரை இந்த வாரத்தில் முன்னேறி யிருக்கிறது. ரேஷவ் நகரம் முற்று கையிடப்பட்டு சோவியத் கைக்கு வரும் தறுவாயிலிருக்கிறது. ரெஷவ் நகரம் ஹிட்லரின் படை பலம் திரண்டுநிற்கும் முக்கியமான இடங்களில் ஒன்று. "ரெஷவை இழந்தால் பாதி பெர்லினை இழந்த மாதிரி" என்று கூறுகிறான் ஹிட்லர்.

ஸ்மாலென்ஸ்க் நகரத்தை மீட்க நாலு திசைகளிலும் சோவியத் படைகள் முன்னேறி வருகின்றன. ஸ்மாலென்ஸ்க்கிற்கு வடமேற்கே வெலிகிலுகி என்ற நகரம் வரை செஞ்சேனை முன்னேறியது. லெனின்கிராடுக்கு நூற்று முப்பது மைலுக்குத் தெற்கேயுள்ள இல்மன் ஏரி பிரதேசத்தில், மீண்டும் ஒரு சோவியத் தாக்குதல்.

## ஹிட்லரின் ஓலம்

மத்திய அரங்கத்தில் கடும்போர் நடைபெற்று வருகின்றது என்ற அறிக்கைகள் வந்துள்ளன. சோவியத் தாக்குதல் தீவிரமாக நடைபெறுவதோடு தொடர்ச்சியாகவும் நடைபெற்று வருகிறது. சோவியத் துருப்புகளின் எண்ணிக்கை அதிகமாயிருக்கிறதென்று ஓலமிடுகிறது ஒரு பெர்லின் செய்தி. பனியும் புயலும் தாங்க முடியவில்லை என்று கூறுகிறது ஒரு ஜெர்மன் ரா்ணுவ அறிக்கை. பிரம்மாண்டமான சோவியத் டாங்குகள் எங்கு பார்த்தாலும் கிளம்பி நாஜிப் பாதுகாப்பு ஏற்பாடுகளை யெல்லாம் தகர்த்தெறிகின்றன.

ஏககாலத்தில் எல்லா முனைகளிலும் நடைபெறும் இந்த சோவியத் தாக்குதல் ஜெர்மன் ராணுவத்தைத் தூக்கி வாரிப் போடுகிறது. சென்ற காலம் மாதிரி ஒரு போர்முனையிலிருந்து மற்றோர் போர் முனைக்குத் துருப்புகளை மாற்றிக்கொள்ளவோ, பிடித்த பிரதேசங்களையாவது வைத்துக் காப்பாற்றிக்கொள்ளவோ முடியாமல் இடைவிடாமல் செஞ்சேனையால் தாக்கப்பட்டு நாஜிப் படைகள் ஒவ்வொரு போர்முனையிலும் முறியடிக்கப்படுகின்றன. சில ஜெர்மன் படைகள் உணவின்றித் தவிப்பதும் மீண்டும் சில, ஆயுதங்கள் போதாமல் திண்டாடுவதும் சர்வ சகஜமாய் விட்டன.

ஆயினும் ஜெர்மன் சேனை அழிந்துவிட்டது என்பது அர்த்தமற்ற பேச்சாகும். இன்னும் அனேக இடங்களில் நாஜிப்படைகள் விடாப் பிடியாய் எதிர்த்தாக்குதல்களை நிகழ்த்த முயற்சிக்கின்றன.

ஸ்டாலின்கிராட் நகரத்திலேயே ஒரு பகுதியில் ஜெர்மன் சைன்யங்கள் இன்னும் சரணடையவில்லை. ஆகாய விமான மூலம் மேலும் மேலும் ஜெர்மன் துருப்புகளை ரஷ்ய அரங்கத்திற்குக் கொண்டு வரும் முயற்சிகளும் கையாளப்படுகின்றன.

## நாஜிகளின் பின்னே

சோவியத் மக்கள் ஒரே மனதுடன் உறுதியாக முன்னேறும் இத்தருணத்தில் உலக மக்களும் இரண்டாம் போர்முனையை ஏற்படுத்த முன்னேறினால் பாசிஸ வீழ்ச்சி விரைவில் வரும்.

சோவியத் தாக்குதலோடு நாஜி ஆட்சி இன்று கைப்பற்றிய நாடுகளில் கலகங்களையும் சமாளிக்கவேண்டி யிருக்கிறது. யூகோஸ்லேவியாவில் கொரிலாப்படைகள் நாஜிசைன்யங்களை எதிர்த்து நிற்கின்றன. பல்கேரியாவில் ராணுவச்சட்டம் ஊரடங்குச் சட்டம் இவற்றின் மூலமே நாட்டை ஆளமுடிகின்றது. ருமேனியாவில் ஹிட்லரின் ஏஜெண்டான ஆண்டோனிஸ்கு என்னும் ருமேனிய சர்வாதிகாரியைச் சுட்டு வீழ்த்த ஒரு முயற்சிசென்ற வாரம் நடந்தது. இதாலியில் சோஷலிஸ்டுக் கட்சி சட்டமறுப்பு இயக்கமொன்றை வற்புறுத்தியிருக்கிறது. முஸோலினி சென்றவாரம் பேசுகையில் ஜெர்மனியிலிருந்து விமான எதிர்ப்பு பீரங்கிகள் சரியாய்த்தான் வந்து கொண்டிருக்கின்றன என்று சமாதானம் கூறமுற்பட்டான். ஜெர்மனிக்கு உட்பட்ட நாடாக இதாலி இருக்கிறது, ஜெர்மனியிலிருந்து ராணுவ சப்ளைகள் வந்தாலொழிய முஸோலினி பாடும் திண்டாட்டம்தான், என்பதையே இது குறிப்பிடுகிறது. பிரான்ஸ் பூராவும் ஹிட்லர்படைகள் ஆக்கிரமித்துக் கொண்டதால் பிரெஞ்சு மக்களின் எதிர்ப்பும் நாஜிகளுக்கு இன்று அதிகரித்துள்ளன. டுலான் துறைமுகத்தில் பிரெஞ்சு கடற்படை தன்னையே மூழ்கடித்துக்கொண்டது பாசிஸத்திற்குக் கையொடிந்தமாதிரி. வட ஆப்பிரிக்காவில் பிரிட்டிஷ் அமெரிக்கப்படைகள் முன்னேறி வந்துள்ளதால் பாஸிஸ்டுகளின் நெருக்கடி பன்மடங்கு அதிகரித்துள்ளது. இச்சமயத்தில் பாசிஸத்தை விரைவில் இறுதியாக முறியடிக்கக்கூடிய நிலைமை முற்றிவருவதை உலக மக்கள் உணர்ந்து இதற்கு முட்டுக்கட்டையாயிருக்கும் பிற்போக்கு சக்திகளைத் தூக்கி எறிந்து இரண்டாம் போர் முனையைச் சிருஷ்டித்தாக வேண்டும்.

## ஜப்பான் ஆக்கிரமிக்கும்

பாசிஸத்தை எதிர்க்கும் சக்திகள் திரண்டுவரும் இத்தருணத்தில் ஜப்பானிய ஆக்கிரமிப்பு அபாயம் எவ்வளவு மடங்கு அதிகரிக்கிறது என்பதை நாம் உணரவேண்டும். அச்சு வல்லரசுகள் தோல்வியுறும் வரை ஜப்பானிய பாசிஸம் காத்திருக்க முடியாது. பலம் பெற்ற சோவியத் நாடு தனக்குப் பரம சத்துரு என்பதை ஜப்பானிய ஏகாதிபத்தியம் உணர்ந்திருக்கிறது. உலகமக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்துவிட்டால் தன் கதி என்னவாகு மென்பதும் அதற்குத் தெரியும். இந்தக் காரணம்கொண்டே பர்மாவில் ஜப்பானியத் துருப்புகள் ஏராளமாகக் கொண்டுவரப்பட்டு இந்திய நாட்டின் மேலும் விரைவில் படையெடுக்க முஸ்தீப்புகள் நடைபெற்றுவருகின்றன. இந்த அபாயத்தை உணர்ந்து நாம் ஒன்றுபட்டாக வேண்டும். நாட்டைக் காக்கவேண்டும். ஜப்பானிய ஆக்கிரமிப்பை எதிர்த்து முறியடிக்க வேண்டும்.

---

## சோவியத்திலே மாயப் பாலம்

சோவியத் நாட்டில் கனமான (வரொஷிலாவ்) டாங்குகள் மாயப்பாலங்களின் மூலம் நதிகளைக் கடந்து மத்தியப் போர் முனைக்குப் போகின்றன. கண்டால் காற்றிலே பறந்து வருவதுபோலத் தோன்றுகின்றனவாம். இந்த மாயப் பாலம் கட்டப்பட்ட கதையை மாஸ்கோ ரேடியோ பின்வருமாறு வர்ணிக்கிறது. "ஒரு பாலம் உண்மையில் கடப்பதற்காகக் கட்டப்பட்டது. மற்றது பயிற்சிக்காகக் கட்டப்பட்டது. ரஷ்யர் பக்கம் நதி சிறிது தாழ்ந்திருந்தது. ஆகவே பாலத்தின் சில பகுதிகளை மறுகரைக்குக் கொண்டுபோக நேர்ந்தது. ஒவ்வொரு இரவிலும் ஒவ்வொரு பகுதியாக ஜெர்மன் குண்டுமாரிகளுக்கிடையே இந்தப் பாலம் கட்டப்பட்டு வந்தது. பனியில் கைகால்கள் மரத்துப்போகும். விடாத ஊக்கத்துடன் பாலத்தைக் கட்டி முடித்தனர் ரஷ்ய எஞ்சினியர்கள். பாலத்தின் மேல் 20 அங்குல உயரத்திற்குத் தண்ணீர். ஆகவே பாலம் கண்ணுக்குத் தெரியாது. இந்தப் பாலத்தின் மேல் பெரிய டாங்குகளைக்கூட ஏற்றிக் கடந்து சென்றனர் சோவியத் வீரர்கள். இதைக்கண்ட ஜெர்மானியர் தங்கள் கண்களையே நம்பவில்லை. ஓடும் தண்ணீரில் டாங்குகள் கடப்பது மாயமாகத் தெரிந்தது அவர்களுக்கு."

---

## ஒற்றுமை முயற்சிக்கு கோவை வழிகாட்டுகிறது

இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியின் கோவை நகரக்கமிட்டியின் முயற்சியின் பயனாக சென்ற வாரம் கோயமுத்தூரில் உணவு நிலைமையையும் விலைவாசிக்கட்டுப்பாட்டையும்பற்றி ஆலோசிப்பதற்கென ஒரு கூட்டம் டவுன்ஹாலில் கூட்டப்பட்டது. அதில் காங்கிரஸ், முஸ்லீக், ஹிந்து மகாசபை முதலிய கட்சிகளின் பிரதிநிதிகளும் இதரர்களும் வந்திருந்தனர். அவர்களில் டவுன் முஸ்லீம் லீக் உபதலைவரும் இரண்டு மாஜி காங்கிரஸ் கமிட்டிக் காரிய தரிசிகளும், ஒரு மாஜி ஜில்லா காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசியும், ஹிந்து மகா சபை உபதலைவரும் காரியதரிசியும் இருந்தது குறிப்பிடத்தக்கது,

கோவை நகரத்திலேயே எல்லா அரசியல் கட்சிகளும் ஒன்றாகச் சேர்ந்து நிகழ்த்திய கூட்டம் இதுதான் முதல் தடவை. அரசியல் அபிப்பிராய பேதங்கள் எவ்வாறிருப்பினும் இன்றுள்ள நிலைமையில் இந்தியர்கள் எல்லோரையும் ஒன்று படுத்தமுடியும் என்று நமது கோவைத் தோழர்கள் நிரூபித்துக்காட்டி யிருக்கின்றனர். கூட்டத்தில் கட்சியின் தாலூகாக் கமிட்டிக் காரியதரிசி தோழர் கருப்பண்ணனும் கோவை காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி ஸ்ரீ சாமுவேலும் கூட்டுக் காரியதரிசிகளாகவும் ஹிந்து மகாசபையைச் சேர்ந்த ஸ்ரீ பாலகிருஷ்ணன் பொக்கிஷதாராகவும் கொண்ட உணவு சப்ளைக் கமிட்டி ஒன்று அமைக்கப்பட்டது. கட்சியின் ஜில்லாக் கமிட்டியின் காரியதரிசி தோழர் கண்ணன் இன்றுள்ள விலைவாசிக்கொள்கை ஏன் பிரயோஜனமற்றதா யிருக்கிறதென்றும் லாபக்கொள்ளையை அகற்றுவதற்கும் உணவுப்பொருள்கள் சரியாக வினியோகிக்கப்படுவதற்குமான பொது ஜன நிர்ப்பந்தத்தின் அவசியத்தை எடுத்து விளக்கினார். கமிட்டியின் ஆதரவில் பொதுக்கூட்டங்கள்போட்டு இந்தப் பிரச்சினைகளைப்பற்றிக் கிளர்ச்சி செய்யத் தீர்மானிக்கப்பட்டது.

---

## இந்தியாவுக்கு தேசீய சர்க்கார் இன்றே வேண்டும்

*பிரிட்டிஷ் மக்களுக்கு வேண்டுகோள்*

பிரிட்டிஷ் கம்யூனிஸ்ட் தலைவரும், சரித்திரப் பிரசித்தமான மீரத் சதி வழக்கில் சம்பந்தப்பட்டவருமான தோழர் பென் பிராட்லி பின்வரும் வேண்டுதலை பிரிட்டிஷ் மக்களுக்கு விடுத்திருக்கிறார்:—

இந்தியாவில் தேசிய சர்க்கார் இந்திய மக்களுக்கு எவ்வளவு அவசியமோ அதே போல் பிரிட்டிஷ் மக்களுக்கும் அவசியம் தான். 38 கோடி உறுதியும் தீரமும் நிறைந்த மக்களின் பரிபூர்ணமான உதவியைத் திரட்டாமலிருப்பது பைத்தியக்காரத்தனம்.

பிரிட்டன் பலசாலியாக இருக்கலாம். ஆனால் பாசிஸ்டு வெறியர்களை எதிர்த்துப் போடும் சண்டையில் எவ்வித பலஹீனமும் தலைகாட்டக்கூடாது.

பிரிட்டனில் தேசீய சர்க்கார் இருக்கிறது. அதேபோல அமெரிக்காவிலும், ரஷ்யாவிலும், சீனாவிலும் தேசீய சர்க்கார்கள் இருக்கின்றன. நமது விருப்பத்திற்கு மாறாக நம்மீது ஒரு சர்க்கார் சுமத்தப்படுமானால் நாம் நன்றாகப்போராட முடியாது.

**இந்திய மக்கள் அவர்களது தேசீய சர்க்காரைக் கட்டாயம் பெறவேண்டும். இந்த அவசரமான கோரிக்கைக்குப் பதிலாக வேறெதையும் ஏற்க முடியாது.**

இந்தக் கோரிக்கைக்கான கிளர்ச்சி பிரிட்டனிலுள்ள ஒவ்வொரு நகரத்திலிருந்தும், கிராமத்திலிருந்தும், தொழிற்சாலையிலிருந்தும் பொங்கி எழவேண்டும். பிரிட்டிஷ் சர்க்கார் உடனே தங்களது தவறான கொள்கையைமாற்றிக் கொள்ளவேண்டுமென்று பொது ஜனங்கள் கோஷமிடவேண்டும்.

சகல பாசிஸ எதிர்ப்புக் கைதிகளும் உடனே விடுதலை செய்யப்படவேண்டும். அவர்கள் நாட்டின் பாதுகாப்பை உருவாக்கி நடத்துவதில் அப்பொழுதுதான் முழுப்பொறுப்பையும் எடுத்துக்கொள்ள முடியும்.

ஜப்பானியர்களை முறியடிப்பதற்காக இந்திய மக்களுக்கு கொரிலாப் பயிற்சி, காவல் பயிற்சி முதலியன அளிக்கப்படவேண்டும். இந்தப் பயிற்சிகளுக்கான ஸ்தாபனங்களை உற்சாகப்படுத்திவளர்க்க வேண்டும்.

இந்தியாவில் தொழிலுற்பத்தி மீதும், ராணுவப் பயிற்சிமீதுமுள்ள தடைகளை நீக்கி இந்தியமக்கள் நம்மோடு சரிநிகராக நின்று மனித சமூகத்தின் புது வாழ்விற்காகப் போராட ஊக்கமளிக்கவேண்டும்.

ஒவ்வொரு தொழிலாளர் சங்கமும், கூட்டுறவுச் சங்கமும் கிளர்ச்சி செய்வதாக. பேக்டரியிலுள்ள தொழிலாளிகள் கோஷமிடுவார்களாக. ஒவ்வொரு சுரங்கத்திலிருந்தும், டிபோக்களிலிருந்தும் தீர்மானங்கள் செய்து பிரதம மந்திரிக்கு அனுப்புங்கள்.

இந்தியாவில் தேசிய சர்க்கார் உடனே வேண்டுமென வற்புறுத்துங்கள்.

---

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

தேசபக்தர்களின் பிரசாரக் கோஷ்டிகள் வீட்டுக்கு வீடு போனார்கள். தேசபக்தர்கள் ஒவ்வொருவரையும் கண்டார்கள். கையெழுத்துக்கள் வாங்கினார்கள். நாசவேலையை நிறுத்த வேண்டும் தேசிய சர்க்கார் வேண்டும் என்ற கோரிக்கைகளில் ஜனங்கள் ஆர்வத்துடன் கையெழுத்துப் போட்டார்கள். கம்யூனிஸ்டுகளின் வழிதான் தேசபக்தி நிறைந்த ஒரே வழி என்பதையும் செயல் முறையில் நடைபெறக் கூடிய வழி என்பதையும் உணர்ந்திருக்கிறார்கள். ஆக்கிரமிப்பு பயம் கதவைத் தட்டிக் கொண்டிருக்கும் இந்த மாகாணத்திலுள்ள ஜனங்கள் படையெடுப்பின் பயங்கரங்களை உணர்ந்திருக்கிறார்கள். கம்யூனிஸ்டுகளின் திட்டமே நாட்டினுள்ளே காணும் அடக்குமுறையையும் வெளியேயிருந்துவரும் ஆக்கிரமிப்பையும் தவிர்க்கும் திட்டம் என்பதைப் பூரணமாக நம்புகிறார்கள்.

ஹிந்துவும் முஸ்லிமும் இரு சாராருக்குமுள்ள பொதுவான ஆபத்து இன்று வந்திருக்கிறது. இதைப் பொதுவாகக் கூடி நின்றுதான் சமாளிக்க முடியும் என்பதை உணர்கிறார்கள்.

## ஒன்றுபட்டால் உண்டு வெற்றி

'ஒன்றுபட்டால் உண்டு வெற்றி' என்பது வெறும் வசனமல்ல. ஆனால் அனுபவபூர்வமான உண்மையாக ஸில்ஹட் (ஆஸாம் தலைநகர்) தோழர்கள் நிருபித்துவிட்டார்கள். அவர்கள் அனுப்பிய தந்திச் செய்தி உத்வேகமூட்டுவதொன்றாகும். அதைக் கீழே தருகிறோம்:—

"நமது கட்சி அறிக்கையில் சூர்மா பிரதேசத்திலிருந்து மாத்திரம் 50,014 கையொப்பங்கள் பெற்றோம். இதில் நூற்றுக்கு 40 முஸ்லீம்கள். பல காங்கிரஸ்வாதிகள் இதில் கையெழுத்துப் போட்டார்கள். நமது அனுதாபிகள் பலர் (இடையிலே வேறுபட்டிருந்தவர்கள்) மறுபடியும் நமது அணியின் கீழ் கூடிவிட்டார்கள். ரூ 418 கட்சி நிதிக்கு வசூல். 4900 கட்சிப் பிரசுரங்கள் வினியோகித்தோம். நமது கட்சியின் வங்க மாகாணத்தின் வெளியீடான 'ஜன யுத்த' பத்திரிகைக்கு 136 புதிய சந்தாதார்களும் 'பீப்பிள்ஸ் வார்' பத்திரிகைக்கு 54 சந்தாதாரும் சேர்த்தோம். 45 பிரசார கோஷ்டிகள் 100 கிராமங்கள், 4 டவுன்கள், 7 கடை வீதிகளில் வேலை செய்தார்கள். கோஷ்டிகளில் நாலில் ஒரு பங்கு தினத்துக்குப் பதினைந்து மணி நேரம் வேலை செய்தனர்".

ஸில்ஹட் தோழர்கள் நமது கடமையைச் சரிவர முடித்தால், நாசவேலை, அதன்பின் அடக்குமுறை என்ற நிலை மாறி தேசப் பாதுகாப்பும் தேசீய சர்க்காரும் பெறும் மார்க்கத்தில் முன்னேற முடியும் என்பதை எடுத்துக் காட்டினார்கள்.

# ஜெர்மன் சேனை அன்றும் இன்றும்

## ஓட்டையாச்சு நாஜிப் பேய்கள் கோட்டை கொத்தளத்திலே

*[ஹிட்லருடைய சேனை உலகிலேயே அசைக்க முடியாதது என்று பறைசாற்றப்பட்டது. தேசத்துரோகிகளை (பெடெயின் போன்றவர்கள்) முன்னுக்கு வைத்து நாட்டைக் கவுழ்க்க வஞ்சகத்திலே நாஜிகள் கைதேர்ந்தவர்கள். ஐரோப்பா முழுவதும் எதிர்ப்பு என்ற பேச்சே இல்லாமல் ஹிட்லரின் காலடியில் சரணாகதியாக விழுந்தது. வெற்றி மோகத்தில் சாம்ராஜ்ய பேராசையில் நாஜிகள் ஆவேச ஆட்டமாடினர். ஆனால் சோவியத் யூனியனில் கால்வைத்த நாள்முதலே அவர்களது வெற்றிக் கனவுகள் வெறுங் கனவாயின.*

*ஆதிக்கக் கோட்டை அடியோடு தகர்ந்தது. ஹிட்லரின் பின்னணியிலேயே புயலும் கலகமும் தலைகாட்டுகிறது. 1941-ல் இருந்த ஹிட்லர் சேனை 1942-ல் அடைந்த தாழ்வையும் வீழ்ச்சியையும் எடுத்துக் காட்டுகிறது இந்தக் கட்டுரை.]*

தோழர் ஜாஸ்லாவ்ஸ்கி

**1941-ம்** வருஷத்திய ஜெர்மன் சேனைக்கும் 1942-ம் வருஷத்திய ஜெர்மன் சேனைக்கும் உள்ள முக்கியமான வித்தியாசம் என்ன? ஹிட்லரின் சேனை 1941 லே ஒரே தரமாக இருந்தது. ராணுவப்பயிற்சி பெற்ற வாலிபர்கள் அதில் பெரும்பாலர் இருந்தனர். தற்கால யுத்த முறைகளில் பயிற்சி பெற்றபடை.

எண்ணிக்கையிலும் இதுபெரிய சேனைதான். வேண்டிய ரிசர்வுகளும் இருந்தன. ஆள் நஷ்டத்தைச் சமாளிக்க முடியும். ஜெர்மனியிலிருந்தும் ஆக்கிரமிக்கப்பட்ட நாடுகளிலிருந்தும் தளவாடங்களும் சப்ளைகளும் வந்து பொழிந்து கொண்டிருந்தன.

இதற்கு அனுபவமுள்ள ராணுவ ஆபீசர்கள் தலைவர்களாக இருந்தார்கள். துருப்புகளின் நம்பிக்கைக்குரியதளபதிகள் இருந்தார்கள். வயது முதிர்ந்த அனுபவம் வாய்ந்த நாஜித்தலைவர்கள் இருந்தார்கள்.

1942லே நாம்காணும் ஹிட்லரின்சேனை முற்றிலும் மாறுபட்டது. நாஜிகள் பிடித்த நாடுகளின் மூலைமுடுக்குகளிலிருந்தெல்லாம் கூட்டிச் சேர்த்த ஓர் அவியல் சேனை இது. வெளிநாடுகளிலே ராஜதந்திரிகளாகக் காலங்கடத்திவந்த ஜெர்மன் அதிகாரிகளும் கூடப் போர்முனைக்கு ஓட்டப்பட்டுள்ளார்கள்.

### ரிசர்வ் படையின் தாழ்வான நிலை

யுத்த சாதனங்கள் செய்யும் தொழிற்சாலையிலிருந்த அத்தனை ஜெர்மன் தொழிலாளிகளும் போர்முனைக்கு அனுப்பப்பட்டார்கள். அந்நியநாட்டுத் தொழிலாளர்கள் பதிலுக்கு அமர்த்தப்பட்டார்கள்.

போர்முனைக்கு முட்டாமல் தளவாடங்கள் சப்ளை செய்யும் திறமை தொழிலாளிகளுக்குத்தான் என்பது ஜெர்மன் தலைமைக்குத் தெரியும். யுத்தகாலத்தில் அவர்கள் முதுகெலும்புமாதிரி. ஆனால் என்னசெய்வது? ஆள்பஞ்சம். அகப்பட்ட தொழிலாளிகள் அத்தனைபேரும் போர்முனைக்குக் கொண்டுபோகப்பட்டனர்.

கிரந்தர சேனையிலிருந்த கிழட்டு சிப்பாய்கள் எல்லாம் மீசை முளைக்காத சிறுவர்களுடன் ஒன்றாகி நிற்க நேர்ந்தது. கிழவர்களுக்கோ ராணுவப்பயிற்சி மெள்ளமெள்ள மங்கி மறைந்துவந்தது. வாலிபர்களுக்கோ புதுப்பழக்கம்.

### குருடனையும் கூனனையும் கூட

மேக்ஸ் மிலியன் வாயிட்மன் என்ற ஜெர்மன் காலாட்படைத் தலைவன் ருஷ்யர்களால் கைது செய்யப்பட்டான். அவன் கூறியதாவது "என் சொந்தக்காரன் ஒரு செவிடன், ஆனாலும் அவனை ராணுவத்தில் சேர்த்துவிட்டார்கள்; அவர்கள் (நாஜி சர்க்கார்) குருடனையும் கூனனையும் கூட விடவில்லை. அவர்களையும் சேர்த்து வேலைவாங்குகிறார்கள். ஆளில்லாப் பஞ்சம். வேறு கதிமோட்சமில்லை.

போராடும் திறமையும் அப்படியே ஏறத்தாழ்வுதான். சண்டையிலே பழகிய சிப்பாய்கள் சரி. ஆனால் எத்தனையோ புதுப்புள்ளிகள். அவர்கள் துப்பாக்கியெடுத்துச் சுடுவதே இதுதான் முதல் தடவை. இது ஜெர்மன் தளபதிகளே ஒப்புக்கொண்ட உண்மை.

### மட்டமான படைத் தலைவர்கள்

எமுல் ஹெண்டல் என்ற படைத் தலைவன் கைது செய்யப்பட்டான். அவன் தனது பட்டாளத்தைப்பற்றிக் கூறும்போது "தொழிற்சாலையிலிருந்த 30-40 வயதானவர்களைச் சேனையில் சேர்த்திருக்கிறார்கள். இவர்களுக்குத் துப்பாக்கி எடுத்துச் சுடமட்டும் தெரியும். மெஷின் கேன்களையைப்பற்றியோ ஒன்றும் தெரியாது. எங்கள் படையிலுள்ளவர்கள் எல்லாம் உணர்வு குன்றிச் சோர்வடைந்திருக்கிறார்கள். இத்தனை சீக்கிரம் போர்முனையில் வந்து நிற்போம் என்று அவர்கள் கனவுகூடக் காணவில்லை" என்று சொன்னான்.

பழம் புலிகளான தளபதிகளை ஹிட்லர் விரட்டி ஓட்டிவிட்டான். இன்னும் பலர் யுத்தத்திலே கொல்லப்பட்டார்கள். புதிய புதியவர்கள் தலைமைப் பதவிகளில் வந்து நிறைந்துவிட்டார்கள். கண்மூடித்தனமான கட்டுப்பாடு. அடிமைத் தனமான பணிவு. சிப்பாய்கள் சாதாரணமானவர்கள். தளபதிகளான பிரபுக்களுக்குப் பணிந்து நடக்கவேண்டுமென்ற ஓயாமல் பிரசாரம்.

### வெற்றி மோகம்

ராணுவ அதிகாரிகள்தான் ஜெர்மனியிலேயே மிகவும் பிற்போக்கானவர்கள். பழைய தலைவர்கள் பலர் சண்டையிலே மாண்டனர். மீண்டு நின்றவர்களுக்கோ வீட்டு நினைப்பு பலமாகப் பிடித்துவிட்டது. இரண்டு வருஷமாகக் கேட்ட குண்டின் குமுறலும், கண்ட பிணத்தின் குவியலும் அவர்களுக்கு அலுத்துப்போயிற்று. ஹிட்லர் வெகு சீக்கிரத்திலே வெற்றி கிடைக்கும் என்று வாக்குறுதி கூறியிருந்தான்.

அவன் பேச்சை நம்பினார்கள். ஆனால் யுத்தத்தில் சோவியத் எதிர்ப்பைப் பார்த்தது பலபேருக்குப் போதுமென்றாகி விட்டது. அதுவரையில் யுத்தத்தில் கஷ்டங்கள் அதிகமாக இருக்கவில்லை. நஷ்டமும் குறைவே. ராணுவமும் அனுபவம் பெற்றது. கொள்ளையடிப்பதிலேயே காலங் கழித்தது. மேற்கு ஐரோப்பிய நாடுகளில் அவர்களுக்குக் கொள்ளையடிக்கவும் இடமிருந்தது. கொள்ளையில் கிடைத்த பங்கை வீடுகளுக்குப் பார்சல் கட்டி அனுப்பினார்கள், வீட்டிலிருந்து கடிதங்கள் வந்துகொண்டிருந்தன. வெற்றியில் மோகம் அவர்களை உற்சாகப்படுத்தியது.

### நம்பிக்கை இழந்தனர்

நாஜி வாலிபர்கள் கட்டவிழ்த்துவிட்ட காளைகளைப் போலக் காமக் களியாட்டங்களில் மூழ்கினர். கேள்வி கேட்பாரற்ற நிலையில் சூறையாடினர். ஜெர்மன் சிப்பாய்களின் ஆபாச நடத்தை அடிமைப்படுத்தப்பட்டமக்களுக்கு ஆத்திரமூட்டியது. ஆனால் நாஜிகளின் ஜாதி வெறி, தாங்கள் தான் உச்சாணிக் கொம்பிலிருக்கும் உத்தம வகுப்பினர் என்ற கர்வம், அவர்கள் கண்களை மறைத்தது.

ஜெர்மன் சேனையை எதிர்க்க ஜெகமெங்கும் யாருமில்லை என்ற நினைப்பின் அலை ஒவ்வொரு நாஜி சிப்பாயின் நெஞ்சிலும் வீசியது.

ஆனால் 1942லோ, வெற்றியும் ஜெயகோஷமும் கிடைக்கவில்லை. ஆனால் பயங்கரமான நஷ்டம். கைப்பற்றிய நாடுகளிலே தாங்க முடியாத தொல்லை. மறக்க முடியாத ருஷ்யப் பனிக்கொடுமை. மின்னல் போலப் பாயும் சோவியத் கொரிலாகளின் உக்ர எதிர்ப்பு இவைகளைத் தான் கண்டார்கள். 1939 முதல் போராடிய நாஜி சிப்பாய்களுக்கு யுத்தத்திலே வெறுப்புத் தட்டிவிட்டது, கசப்புக் கண்டு விட்டது.

### பட்டினியும் சகதி வாழ்வும்

இன்று அவர்களால் அசைய முடியவில்லை, அத்தனை சோர்வு. வீடு திரும்புவோமா, மனைவி மக்களைப் பார்ப்போமா ஓய்வு என்பதைக் காண்போமா? என்பதுதான் அவர்களுக்குக் கனவிலும் நனவிலும் இருந்த நினைப்பு. கிழவரான சிப்பாய்களில் பலர் வயிறு நிறையச் சாப்பிட்டு எத்தனையோ நாட்களாகிவிட்டன. துணிகளை வெளுத்துக்கட்டி வெகு தினங்களாகிவிட்டன. உடம்பிலே தண்ணீர் பட்டு மாதங்கள் கடந்துவிட்டன. சீலைப்பேன் வழிய சிந்தை தடுமாற அவர்கள் சகதியிலே வாழ நேர்ந்தது.

இன்று ஹிட்லரின் சேனையிலே பட்டினிப் பட்டாளம்தான் அதிகம். பட்டினித் தீ எரிக்கும் ஜெர்மனியிலிருந்தும் பஞ்சப் புயலடிக்கும் ஐரோப்பாவிலிருந்தும் போர் முனைக்கு வந்த பஞ்சைகள் அவர்கள். சோவியத் போர்முனை என்றால் நரகத்துக்குட் டிக்கெட் வாங்கவேண்டுமென்பது அவர்களுக்குத் தெரியும். சாவுக்குப் போகும் அவர்களை பந்துமித்திரர்கள் வழியனுப்பினர்கள். ரஷ்யாவிலே சூறையாடக் கை வைத்தால் சுடுகாட்டிலிடதான் முடியுமென்பது அவர்களுக்குத் தெரியும். சோவியத் சிப்பாய்கள், கொரிலாக்களின் வீரபராக்கிரமங்களைக் கேட்டுக் குலை நடுக்கம் எடுத்துவிட்டது இவர்களுக்கு.

### யாருக்காகச் சாவது?

1941 லே ஹிட்லரின் சேனைக்கு யுத்த லட்சியம் என்ன, யுத்தத்திற்குக் காரணம் என்ன, என்பதைப்பற்றி யெல்லாம் எண்ணவே அவசியமில்லை. யுத்தத்தில் எல்லோருக்கும் லாபம்தான் என்று தோன்றியது.

ஆனால் 1942லே ஹிட்லரின் ராணுவம் யுத்தத்தின் காரணம் என்ன? யுத்தம் நடத்தும் தலைவர்களின் நோக்கம் என்ன என்பதைப் பற்றி நினைக்க வேண்டி வருகிறது. இந்த லட்சியங்கள் தாய்நாட்டுக்காக உயிரை அர்ப்பணம் செய்யத் தூண்டுவன அல்ல. பிறநாடுகளைப் பிடித்து, ஜனங்களைக் கொள்ளையடித்து, என்றுமில்லாத வகையில் எல்லையற்ற கொடுமைகளை விளைப்பது நீதியென்று எந்த ஜெர்மன் சிப்பாயும் மனச்சாட்சியுடன் ஏற்றுக்கொள்ள முடியாது.

தட்டிக்கேட்க ஆளில்லாவிட்டால் இவர்கள் சண்டப் பிரசண்டர்கள் தான். ஆபத்து ஏதுமில்லாமல் ஆனவரைக்கும் கொள்ளை யடிப்பது இவர்களுக்கு எளிது தான். ஆனால் அன்னியமண்ணிலே ஆருயிரைக் கொடுப்பதென்றால் லட்சியமேதாவது இருக்கவேண்டாமா? இன்று என்ன லட்சியம் இருக்கிறது? 1942-ம் வருஷத்திய ஜெர்மன் சிப்பாய்க்கு ஒன்றுமே புரியவில்லை. பீதியும் அச்சமும் நிறைந்த பின்னணியிலிருந்து இவர்கள் போர்முனைக்குப் போகிறார்கள். ஜெர்மனியிலே வெற்றிகளைப்பற்றிய பேச்சுமூச்சில்லை. ஆனால் பெருத்த நஷ்டங்களைப்பற்றிய கூக்குரல், ஹிட்லரின் திட்டங்கள் குலைந்து போனதைப்பற்றிய கூச்சல்தான் எதிரொலி செய்கின்றது.

### வெற்றிக்கனவு வெறுங்கனவே

நாஜிப் பிரசார இலாகா இன்னமும் வெற்றிவெற்றி என்று ஊளையிட்டபடிதான் இருக்கிறது. ஆனால் ஜெர்மனியரின் நெஞ்சிலே இது தைரிய மூட்டவில்லை, மகிழ்ச்சியளிக்கவில்லை. 'வெற்றிக் கனவெல்லாம் வெறுங்கனவே' என்று தம்மைத் தாமே நொந்துகொள்கிறார்கள். 1914–18 லே பெரிய பெரிய வெற்றிகளுக்குப் பின்னால் படுதோல்வியும் சர்வநாசமும் அடைந்ததை அவர்கள்நினைத்துப் பார்க்கிறார்கள்.

நாஜிப்பத்திரிகைகள் என்ன பிதற்றினாலும் சரி, நீண்டதொரு யுத்தம் என்றால் ஜெர்மனிக்கு நாசம் என்பது ஜெர்மானியருக்குத் தெரியும். ஹிட்லருடைய பேராசைப்பித்தினால் பிரிட்டனையும் அமெரிக்காவையும் விரோதித்துக் கொண்டோம், ஆகவே இது நீண்டயுத்தம்தான் என்பதை அவர்கள் உணர்வார்கள்.

1941 ல் ஹிட்லர் சேனையில் பாசிஸ்டு வர்க்கத்தின் கோஷ்டிகள் அதிகம். ஜெர்மனியின் பழமை தெரியாது; நாஜிப் போதையில் ஊறிவளர்ந்த வாலிபர்கள் இவர்கள்.

வாலிபர்களின் மூளை குழப்பப்பட்டது. ஜெர்மன் இளைஞரின் போக்கைத் தலைகீழாக்கியது பாசிஸம். கொஞ்சம்கூட மனிதத் தன்மையோ பச்சாத்தாபமோ இல்லாத கொலைபாதகர்களாகவும், கொள்ளைக்காரர்களாகவும் காட்டுமிராண்டிகளாகவும் மாற்றிப் போட்டுவிட்டது பாசிஸம்.

ஜெர்மன் மின்னல் தாக்குதலில் இவர்கள்தான் முதலிலே நுழைக்கப்பட்டனர். பலர் கொல்லப்பட்டனர். மற்றவர்களில் பலர் கற்பழிக்கும் கயவர்களாக, கொள்ளையடிக்கும் கள்வர்களாக, காலிக்கூட்டமாக மாறினர்.

ஆகவே இந்த நாஜிவாலிபருக்குப் பதிலாக நடுத்தரவயதுள்ள ஜெர்மானியர் சேனையில் வந்தனர். அவர்களுக்குப் பழங்காலத்தின் சரித்திரம் தெரியும். தேர்தல் காலங்களில் பாசிஸ்டுகளுக்கு விரோதமாகக் கம்யூனிஸ்ட் கட்சி, சோஷல் டெமொக்ராடிக் கட்சி, கதோலிக் கட்சி முதலிய கட்சிகளுக்கு வோட்டளித்திருக்கிறார்கள். நாஜிகளின் பயங்கர அடக்குமுறைக்கு ஆளாகாமலிருக்க வேண்டித் தங்கள் உண்மையான ராஜியக் கொள்கைகளை மறைத்து நடந்துவந்தனர். ஹிட்லரின் திட்டங்கள் தோல்வியடையத் தொடங்கியவுடன் தங்கள் எண்ணங்களை எடுத்துக்கூறத் தொடங்கிவிட்டார்கள்.

### ஹிட்லரை நம்பவில்லை

இந்தப் புதிய பட்டாளங்களுக்குத் தங்கள் யுத்த நோக்கத்திலோ, ஹிட்லரின் வெற்றியிலோ நம்பிக்கை கிடையாது. அவர்களுக்கு ரஷ்யா எப்படிப்பட்டதென்பது தெரியும். இந்த யுத்தத்தினால் ஜெர்மனிக்கு நன்மை ஏதுமில்லை என்பதும் தெரியும்.

1941-லே ஹிட்லரின் சேனை அவனது அகங்காரப் பேச்சுக்களை—வெற்றி வரும் என்ற உறுதிகளை நம்பியது. 1941-ம் வருஷத்திய முன் பனிக்காலத்திலேயே யுத்தம் முடியுமென்று ஹிட்லர் சொன்னான், பின்னே பின்பனிக்குள் என்று நீட்டினான். யுத்தம் துரிதமாக முடியும் சமாதானம் ஏற்படும், வீட்டுக்குத் திரும்பலாம் என்ற எண்ணத்தில் சிப்பாய்கள் போரிலே கலந்தனர்.

ஆனால் 1942-ம் வருஷத்திலே, சோவியத் யூனியனுடன் இன்னுமொரு பனிக்காலப் போராட்டம் உண்டு என்பதை ஹிட்லரின் சேனை உணர்ந்துவிட்டது. ஹிட்லருடைய பேச்சுக்கள் உற்சாகமூட்டுவதற்குப் பதிலாக, தயக்கமும் மயக்கமும் தருகின்றன. போர்முனைக்குப் போக மனதில்லை ஜெர்மன் சிப்பாய்களுக்கு.

அடிமைப்படுத்தப்பட்ட நாடுகளிலே தங்கியிருந்த சேனைகள் யுத்தகளத்துக்கு அனுப்பப்படுகின்றன. ஷிவரின் என்ற ஜெர்மன் பட்டணத்தில் சிப்பாய்களின் மனைவிகளுடன் போலீஸ்படைகள் கொம்மாளமடித்துக்கொண்டிருந்தன. அதைக் கண்டு ஆத்திரங்கொண்ட சிப்பாய்கள் போலீஸாரைத் தாக்கினார்கள். 'யுத்தம் ஒழிக' என்று கோஷமிட்டார்கள். இத்தகைய சம்பவங்களால் சிப்பாய்களிடையே அதிருப்தியும் கோபமும் பெருகிவருகிறது.

### கலகங்கள் கிளம்புகின்றன

சோவியத் முனைக்கு அனுப்பப்பட்ட ஜெர்மானியரின் 81-வது பட்டாளத்தில் யுத்த எதிர்ப்பு மனோபாவம் பொங்கிவிட்டது. கைகலந்த சண்டைகள் நடந்தன. நூறுபேருக்கு மேல் சுடப்பட்டனர். போலண்டிலே ஒரு ஜெர்மன் படையே கலகம் செய்தது.

பிரான்ஸிலேயும், பெல்ஜியத்திலேயும் இருக்கும் ஜெர்மன் படைகளுக்கிடையே பெருங் கலகங்கள் தலைகாட்டியுள்ளன. ஆயிரக்கணக்கான ஜெர்மன் மக்கள் ஹிட்லரை எதிர்த்தும் யுத்தத்தை எதிர்த்தும் பிரசாரம் செய்வதாகக் குற்றம் சாட்டப்பட்டுக் கைது செய்யப்படுகின்றார்கள்.

### குழப்பத்தைப் பெருக்க

மேற்கூறிய சம்பவங்களிலிருந்து ஒரு விஷயம் நிச்சயமாகிறது. அதாவது 1941-ல் இருந்ததைவிட 1942-ல் ஜெர்மன் சேனை பலஹீனப்பட்டிருக்கிறது. ஜெர்மன் சேனையால் போராடவே முடியாது ஆகவே அபாயமில்லை என்று அர்த்தமல்ல. இந்தமாதிரி திடீர் முடிவு செய்வது பெரிய தவறு.

செஞ்சேனையின் வீராவேசமும், சோவியத் கொரிலாக்கள் விளைக்கும் தொல்லையும் நாஜிப்படையின் பலத்தை உலுக்கி வருகின்றன.

ஜெர்மன் சேனைக்கு ஆட்டங் கண்டு விட்டது. ஆனால் இன்னும் பூரணமாக முறியடிக்கப்படவில்லை. உள்நாட்டிலே இருக்கும் குழப்பம் வலுத்து நாஜிகளை ஒழிக்கும் என்று நாம் சும்மாயிருக்க முடியாது. இந்தக் குழப்பத்தைப் பெருக்கி ஓய்வொழிவின்றி, கருணைக் காட்டாமல் நாஜிப் பேய்களை நாசம் செய்யவேண்டும்.

சென்னை, நெ. 2, ஜோன்ஸ் லேனில் "ஜனசக்தி" அச்சுக்கூடத்தில் பி. ராமமூர்த்தியால் அச்சிடப்பட்டுப், பிரசுரிக்கப்பட்டது.